# சிவாஜி





1972 மார்ச், பங்குனி




ஆண்டு : 37 மார்ச் 1972 இதழ் : 3


| | | | |
|---|---|---|---|
| 1. | தலையங்கம் | — பத்திராதிபர் | 70 |
| 2. | எனது இலக்கியப்படகு | — திருலோக சீதாராம் | 71 |
| 3. | தெய்வ நெறி | — ,, | 72 |
| 4. | வீட்டில் ஒரு ஆலயம் | — ஜானகிமைந்தன் | 73 |
| 5. | பசுமைப் புரட்சி... | — பி. பி. பால் | 78 |
| 6. | கான்சாசிப் கருப்பையா | — கோவை அ. அய்யாமுத்து | 81 |
| 7. | சந்தோஷம் | — வல்லிக்கண்ணன் | 85 |
| 8. | கற்பனையின் விளையாட்டு | — வல்லிக்கண்ணன் | 86 |
| 9. | "பரமான்ன" | — பி. எஸ். வி. சுப்ரமண்யன் | 88 |
| 10. | காலமும் மனிதரும் | — வல்லிக்கண்ணன் | 91 |
| 11. | டோவர் கடற்கரை | — திருலோக சீதாராம் | 92 |


---

ஆசிரியர்கள் :

ஆங்கிலப் பகுதி : T. N. ராமச்சந்திரன், B.COM. B.L.
பத்திராதிபர் : திருலோகசீதாராம்
காப்பாளர் : அமுசு பெரியசாமி

---

ஆண்டுக் கட்டணம் ரூ. 10

அலுவலகம் : 2-A, கோட்டை ஸ்டேஷன் ரோடு, திருச்சி-2. (தொலைபேசி : 7822)

---

அட்டை : அன்னை கஸ்தூரிபாய்.



மாதவம் சிறந்து
மானிடம் உயர்க

## அகாடெமிப் பரிசு

வேறு பல காரணங்களுக்காக அல்லாமல், இலக்கியத் தகுதி ஒன்றுக்காக மட்டுமே பரிசளிக்கவும் சாகித்ய அகாடெமி முன்வந் திருக்கிறது. இந்த ஆண்டு தீபம் ஆசிரியர் நா. பார்த்தசாரதிக்கு அளித்துள்ள பரிசு அத்தகையது. தமிழ் நாட்டில் இலக்கித் தகுதியைக் காட்டிலும் பல்வேறு தகுதிகளே சாகித்யஅகாடெமிப் பரிசுக்கு இன்றியமையாததாகக் கருதப்பட்டு வந்தது. போனல் போகிறதென்று இலக்கியப் படைப்பாற்றலை மட்டும் மதித்து இந்த ஆண்டு பரிசளித்துக் கௌரவித்திருக்கிறார்கள்.

ஸ்ரீ. பார்த்தசாரதி இளைஞர். இலக்கியப் படைப்பாற்றல் கொண்டவர். அருமையான நாவல்களை இயற்றியிருக்கிறார். அவ ருக்குக் கிடைத்துள்ள பரிசும் பாராட்டும் உண்மையாகவே எழுத்தாளர்களுக்குப் பெருமிதம் தருவதாகும். ஸ்ரீ. பார்த்தசார திக்கு நமது வாழ்த்துக்களும் பாராட்டும் உரியனவாகும்.

## பண்டிட் ராமசர்மா

வைத்ய வாசஸ்பதி பண்டிட் ராமசர்மா சென்ற திங்களில் காலமாகிவிட்ட செய்தி கேட்டுப் பெரிதும் துயருற்றோம். வட மொழியில் பெரும் புலமை பெற்றவர் சர்மா. ஆஸ்திக காரியங் களில் மிகுந்த ஊக்கம் கொண்டு சிறந்த பணி புரிந்தவர். கல்வி மான்களையும் பொதுத்தொண்டர்களையும் ஆதரவு செய்து கௌர விப்பதில் ஆர்வம் கொண்டவர்.

ஆஸ்தான கவிஞர்களாக விளங்கிய அமரர் ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தி சாஸ்திரிகளிடமும், நமது நாமக்கல் கவிஞரிடமும் அள விறந்த நேயம் உடையவர். நம்மிடம் சிறந்த நட்புரிமையும் ஆதரவும் காட்டியவர். குழந்தை வைத்தியத்தில் நாடெங்கும் புகழ்பெற்ற தமது மருத்துவ நிலையத்தையும் சகோதரர்களையும் குமாரர்களையும் விட்டுப் பிரிந்துவிட்டார். அவருடைய வழியில் அந்தக் குடும்பத்தினர், மருத்துவத் துறைக்கும் நாட்டுக்கும் நற் பணி புரிபவர்களாய் அவர் விட்டுச்சென்ற மரபைப் பேணி வரு வார்கள். ஸ்ரீ சர்மாவின் மேன்மையான ஒழுக்கம், சீலம், நற் பண்புகள் நமது நினைவை விட்டகலா. அவருடைய ஆன்மா சாந்தியடைவதாக.




## வாழ்வின் சேமிப்பு

"அச்சக உரிமை மாற்றம் பற்றிய அறிக்கை அதிர்ச்சி தந்தது. மேற்கொண்டு என்ன செய்யப் போகிறீர்கள்?" என்று நண்பர் ஒருவர்பரிவுடன் விசாரித்திருந்தார். "தேவசபைக் காரியங்களில் முழுதும் ஈடு படுவதற்காக ஆசிரம வாழ்க்கை மேற் கொண்டு விட்டீர்களோ என்று நினைத்தேன்" என்று மற்றொரு நண்பர் எழுதியிருந்தார். "ஆபீசில் அடிக்கடி மேஜை நாற்காலிகளை இடம் மாற்றிப் போட்டுக் கொண்டேயிருப் பீர்கள். அப்படித்தானே இதுவும்?" என்று பிறிதொரு அன்பர் கேட்டிருந்தார்.

அத்தனைப் பரிவு வினுக்களுக்கும் விடை யாக இந்த இதழ், சிவாஜியின் சொந்த அச் சுக் கூடத்திலிருந்துதான் வெளி வருகிறது என்ற செய்தியை அறிவித்துக்கொள்கிறேன். சிவாஜி அச்சுக்கூடத்திற்கு அருகிலேயே 'கவிஞர் அச்சகம்' என்ற புதிய பெயருடன் சிவாஜியின் சொந்த அச்சகம் அமைந்து வேலை நடைபெறுகிறது,

இதுவரை திருச்சியில் சிவாஜியின் அச்ச கங்களாக இருந்து கைமாறிப் போனவை சுமார் ஏழு இருக்கும். அனைத்தும் நன்ருக நடைபெற்றுவருகின்றன. ஒரு வேளை, அச்ச கங்களை உருவாக்குவதும் பின்னர் அவற்றை விற்றுவிட்டுப் பிறிதொன்று தொடங்கு வதுமே ஒரு தொழிலாகச் செய்துவந்திருக் கிறேனே என்று தோன்றுகிறது. ஆகை யால் ஒன்றைக் கொடுத்துவிட்டுப் புதிதொன் றைத் தோற்றுவிப்பது ஒன்றும் எனக்குப் புதிதில்லை. தயக்கமும் ஏற்பட்டதில்லை. ஏன் என்ருல் இத்துணை மாற்றங்களும் சிவாஜி 36 ஆண்டு காலமாகத் தவருமல் ஒழுங்காக வெளி வந்திருப்பதற்குஅடிப்படையாக இருந் துள்ளன.

"ஆமாம், இத்தனை அச்சகங்கள் அமைத்து விற்பனையும் செய்திருக்கிறீர்களே, ஏதாவது பொருள் சேர்த்துக்கொண்டிருக் கிறீர்களா?" என்று நண்பர்கள் வினவுகிருர் கள். நான் என்ன பதில்சொல்வது! வாழ்வில் நாளைக் கடத்திச் செல்வதற்குமேல் என்ன நோக்கம் உண்டு? எனது வாழ்வில் 56 ஆண்டுகளையும் சிவாஜியின் வயதில் 36 ஆண்டுகளையும் சமாளித்து வந்திருக்கிறேன். போதாதா?

கணந்தோறும் மாறிச் செல்லும் காலத் தின் நெடிய கரையில் நிலைபேறு என்பது எதுவும் இல்லை. எந்தமாற்றமும் ஒரு முற்றுப் புள்ளியில்லாமல் தொடர்ந்து மாறி மாறிச் செல்வதே வாழ்வு. எந்தப் புள்ளியிலாவது நின்றுவிடும்போதுதான் அது இறுதியை அடைந்து விடுகிறது. இப்போதைக்கு எண் ணற்ற மாற்றங்களினூடே தொடர்ந்து மேற் செல்லும் வாழ்வு நமக்கு இருக்கிறது என் பதே சாதனை. நமது கதியில் இறுதியென்ற இடையீடு குறுக்கிடும்வரை மாற்றங்கள் நிகழ்வதியல்பு. ஏனெனில் அதுவேதான் வாழ்வாக இருக்கிறது.

கோடிக்கணக்கான ஜனங்களுக்கு அந் தந்த வேளையும் ஒரு பிரச்னையாக இருக்கும் உலகில், முன்னிற்கின்ற ஒவ்வொரு கணத்தி லும் உழைப்பதற்கு வாய்ப்பும், உயிர் வாழ வசதியும், உணர்வின் நிறைவும் வேண்டும். இதை நீடித்துச் செல்வதற்காக அவ்வப் போது பற்பல மாற்றங்களையும் ஏற்றுக் கொண்டு அவற்றுள் இணைந்து இயங்கு கிருேம். இதில் வெற்றி தோல்வி என்ற பாகு பாடு எதுவும் இல்லை. ஒத்தியங்கும் நண்பர்

கூட்டமும் ஒத்துணரும் ஆன்மாக்களின் உறவும் நாம் நமது வழிப்போக்கில் பெறுகின்ற நலன்கள்.

முடி மன்னர்களாக வாழ்ந்தவர்கள் நம் கண் முன்னுலேயே கிரீடமும் சிம்மாசனமும் இழந்தார்கள், பெற்றுக்கொண்டிருந்த ஜீவனும்சமும் பறிபோய்விட்டது, ஒன்றுமில்லாதிருந்தவர்கள் பரிசுச்சீட்டுலச்சாதிபதிகளாகி வருகிருர்கள்.

மாறி வருகின்ற பொருளாதாரக் கோட்பாடுகளில் தனி மனிதன் வாழ்வு எதிர்காலத்தில் எப்படி யெல்லாம் அமையுமென்று சொல்ல முடிவில்லை. இதில் ஒவ்வொருவனும் பொருள் சேர்ப்பது பற்றிக் கவலைப்பட்டு என்ன ஆகப் போகிறது? கண்முன்னுள்ள ஒவ்வொரு கணத்தையும் வாழ்ந்து முடிப்பதைப் போல் ஒருவன் அடையும் பயன் வேறெதுதான் உண்டு?

வாழ்வின் சாதனையைப் போய் அணுபைசாக் கணக்கில் மதிப்பிட்டால் நாம் ஒவ்வொருவரும் அன்ருடம் தின்றுதீர்க்கும் உணவும் கட்டி எறியும் துணியும்விழுங்கிய மருந்து மாத்திரைகளும் சேர்ந்து கேவலம் ஒரு தலைக்கு இரண்டு லட்ச ரூபாயாவது இருக்கும். அதற்காக அதைச் சேர்த்திருந்தால் என்று கணக்கு போடுவதற்கு என்னபொருள் இருக்கிறது?

அப்படியானுல் எதிர்காலச் சேமநிதி என்பது ஒன்று வேண்டாமா என்று கேட்கலாம். உடமைகளைப் பற்றிய உலகப் பொருளாதார சித்தாங்களே மாறிப்போய்க்கொண்டிருக்கின்றன. சேமித்து வைப்பன என்ன பயன் விளைவிக்கப் போகின்றனவோ தெரியாது. அப்படி எல்லோரும் சேமித்து விடுவதும் எளிதன்று.

ஒருநாளும் திரும்பிவராத தொலைதேசம் செல்லும் நாய் வழியிடையில் தான் கௌவி வந்த எலும்பை, சுவடறியாத பாலை மணல் வெளியில் புதைத்துவைத்துவிட்டுப்போவது வியப்பாக இல்லையா என்கிருர் பாரசீகத்துத் தீர்க்கதரிசி கலீல் கிப்ரான்.

இப்போதைக்கு நமக்கு, தமிழும் கவிதையும்ரசனையும்ரசிகர்களும் என்ற வட்டத்துக்கு வெளியேயுள்ளஉலகத்தைப் புரிந்துகொள்ள முடியவில்லை. அதற்கு அவசியமும் இல்லை. ஒவ்வொரு கணமும் இனிமை. ஒவ்வொரு மாற்றமும் விளையாட்டு. எதிலும் சிக்கி உழலாத மனம். வாழ்க்கை நன்ருகவே இருக்கிறது. இது போதும். வாழ்வின் சேமிப்பும் அதன் பயனும் வாழ்வுதான். ●

## தெய்வ நெறி

**Translation of Gerard Manley Hopkins's Sonnet "Thou art indeed just, Lord"**

இறைவா நீயோ நெறியாளன்
எனினும் நின்பால் மல்லுக்கு
யானும் நிற்கக் கூடுமெனில்
எனது வழக்கும் நெறியாமே!
நிறை தாழ்ந்தவரின் வழிகளெலாம்
நினைத்த பயனை விளைத்திடலேன்?
நெறி முயல் கின்றேன் அவை முடிவில்
நெஞ்சில் தோல்வி நிறைப்பதுமேன்?
ஐயா என்றன் அருந்தோழ!
அடியேனுக்குப் பகைவனென
ஆனுல் பிறிதென் செய்குவையோ
அறியேன் என்னை வீழ்த்திப்பின்
செய்யும் இடர்ப்பா டிவற்றின்மேல்?
தேவ! நின்பால் பிறவியெலாம்
செலவிடு கின்றேன்; நாளெலாம்.
சேரும் குடியர், காமுகரும்
எஞ்சிய பொழுதில் ஏற்றங்கள்
எய்திடு கின்ருர் என்னேயோ?
இங்கிது காணுய் கரை புதர்கள்
எழுந்து செறிந்து நிற்பனவே!
கொஞ்சுங் கோல மருத்துக்கள்
குலுங்கித் தென்றல் விளையாடும்;
கூடுகள் தேடும் பறவையினம்;
கூடறி யேனுன் குமைகின்றேன்.
உயிர்க்கும் ஒன்றை விதைக்காத
ஓங்குங் காலப் பேடிமையேன்.
உடையாய்! வாழ்வின் ஒருவேந்தே!
உனதருள் வேரில் பொழிந்திடுவாய்.

# வீட்டில் ஒரு ஆலயம்

"ஜானகி மைந்தன்"

காட்சி-1

(சுப்புவின் வீடு — சுப்பு, சரோஜா)
(சுப்பு ஆபீஸிலிருந்து வருகிறன்)

சரோ :- வாங்க... வாங்க... என்ன இப்படி ஒரே 'டயர்டா' இருக்கீங்க... இதோ ஒரு 'செகண்ட்'ல காபி கொண்டுவரேன்... (போகிறன்)

சுப்பு:- என்ன இது அதிசயமா இருக்கு இன்னிக்கு உபசாரம்! உம்... ஆபத்து ஏதோ பின்னுலேயே இருக்குபோலத் தெரியுது.

சரோ :- (காபி தம்ளருடன் வந்தவாறே) (சிணுங்கிக்கொண்டே) ஆபத்து மில்லே, ஒண்ணுமில்லே... ஒரு சின்ன விஷயம்தான்... மொதல்ல காபியைக் குடிங்க...

சுப்பு:- (காபியைக் குடித்துக்கொண்டே) உம்... என்னன்னு சொல்லு ?

சரோ :- வந்து... நேத்து அம்புஜம் வீட்டுக்குப் போயிருந்தேன். அங்க காலி 'இஞ்செக்ஷன்' 'பாட்டில்'ல ரொம்ப அழகா கோயில் பண்ணியிருந்துச்சு. நானும் ஒண்ணு பண்ணலாம்னு பாக்கறேன். நவராத்திரிக்கு கொலுவில் வெச்சா ரொம்ப நல்லா இருக்கும். அதனுல 'இஞ்செக்ஷன் பாட்டில்' கொஞ்சம் வாங்கிகிட்டு வாங்க... என்ன நான் சொல்றது காதில விழுந்துச்சா ?

சுப்பு:- (எங்கோ ஞாபகமாக) ஓயெஸ்... விழுந்துச்சே... 'இஞ்செக்ஷன்' போட்டுக்கணும்... வாங்கிட்டு வரணும்... டாக்டர் வீட்டுக்குப் போகணும்... அவ்வளவுதானே...

சரோ :- ஏங்க... நீங்க ஆகஸ்டு 30 பண்றீங்களா ? சீரியஸ்ஸா இருங்க...

சுப்பு:- உம்... சீரியஸ்ஸா ? யாருக்கு ? அதுக்குத்தான் டாக்டர் வீட்டுக்குப் போகணுமா...? இதோ போறேன்...

சரோ :- போதுமே... உங்கபேத்தல்... இதப்பாருங்க... உங்க ஃப்ரண்ட் டாக்டர் சாமிநாதன் இருக்காரே, அவங்க வீட்டுக்குப்போயி கொஞ்சம் காலி 'இஞ்செக்ஷன் பாட்டில்' வாங்கிகிட்டு வாங்க... சொல்றது புரிஞ்சுதா ?

சுப்பு:- (தலையாட்டுகிறன்)

சரோ :- ஏன் தலையாட்டறீங்க ? பொறந்தது தஞ்சாவூர்லன்னு எதுக்கெடுத்தாலும் தலையாட்டணுமா?... இது என்ன 'ஆபீஸா' ? நான் என்ன ஒங்க 'பாஸ்' ஆ ?

சுப்பு :- வீட்ல நீ இப்படிக் கேக்கறே... ஆபீஸ்ல என்கூட வேலை செய்யறவங்க இது என்ன உன் வீடா, ஆபீஸர் கிட்ட ஏண்டா பயப்படறே அவர் என்ன உன் 'ஒய்ப்' ஆ அப்படிங்கருங்க.

சரோ :- போதுமே... நாளைக்கே போய் காலி 'பாட்டில்' வாங்கிட்டு வாங்க.

சுப்பு:- காலி 'பாட்டிலா' ? எதுக்கு ?

சரோ :- என்ன இது? விடிய விடிய ராமாயணம் கேட்டு சீதைக்கு ராமன் சித்தப்பாங்கற கதையா இருக்கு...

சுப்பு :- சரோ, விடியவிடிய கண் முழிச்சு ராமாயணம் கேட்டா அப்படித்தான் புரிஞ்சுப்பாங்க... சரி... விஷயத்தைச் சொல்லு... இப்ப என்ன செய்யணும்?

சரோ :- சரி... சரி... கடைசியாச் சொல்றேன்... உங்க ஃபிரண்ட் டாக்டர் சாமிநாதன் கிட்டேபோய் காலி 'இஞ்செக்

ஷன் பாட்டில்' வாங்கிட்டு வாங்க... கோவிலுக்கு வேணும்...

சுப்பு:- கோவிலுக்கு வேணுமா? துலா பாரமா? எடைக்கெடை 'இஞ்செக்ஷன் பாட்டில்' தரேன்னு வேண்டிகிட்டயா?

சரோ:- எதுக்கெடுத்தாலும் கலாட்டா தானு? கோவில் செய்யறதுக்கு வேணும். காலி 'பாட்டிலை' ஒட்டி அழகா கோவில் மாதிரி எல்லா வீட்லேயும் பண்ணி வெச்சிருக்காங்க... நம்ம வீட்டிலேயும் ஒண்ணு பண்ணப்போறேன் புரிஞ்சுதா?

சுப்பு:- புரியுது... புரியுது... நல்லாப் புரியுது. வாங்கிட்டு வரேன்... இல்லம் ஒரு கோவில்னு சொல்லுவாங்க... இங்க என்னடான்னு இல்லத்துக்குள்ளேயே கோவில்... சரி... சரி...

காட்சி-2

(அதே இடம்... அதே நபர்கள்)

சரோ:- என்னங்க, இன்னிக்கு லீவு தானே உங்களுக்கு? ஒரு சின்ன 'ஹெல்ப்' பண்ணனும்.

சுப்பு:- வந்துதுடா ஆபத்து... லீவுநாள் எதுக்கு வரது தெரியுமோ? வாரத்தில் ஆறுநாள் வேலை செய்தவன் ஒருநாள் 'ரெஸ்ட்' எடுத்துக்கத்தான்.

சரோ:- ஓங்களை யாரு 'ரெஸ்ட்' எடுத்துக்க வாண்டான்னு? 'ஜூனியர் சேம்பர்' வேலைன்னு செய்வீங்க... 'ஆபீஸர்' வீட்ல எதாவது வேலை கொடுத்தா செய்வீங்க... சொந்த வீட்ல ஒரு சின்ன 'ஹெல்ப்' செய்ய முடியாதாக்கும்.

சுப்பு:- நான் 'ஜூனியர் சேம்பர்'னு நீ 'லேடீஸ்கிளப்' வேலை செய்யலையா? ஆபீஸர் சொல்ற வேலையைச் செஞ்சா என்ன? அவர் மனசு வெச்சார்னு 'ப்ரமோஷன்' கிடைக்கும். கிடைச்சா உனக்குத்தானே சௌகரியம்.

சரோ:- இப்படி நம்பி ஏமாந்துகிட்டே இருங்க. ஆபீஸ்ல வேலை செய்யற எல்லாரும் இப்படி ஆபீஸரைக் காக்கா பிடிச்சா எல்லாருக்குமா 'ப்ரமோஷன்' கிடைக்கும்?

சுப்பு:- லீவுநாளும் அதுவுமா தகராறுக்கு ஆரம்பிச்சாச்சா? இப்ப என்ன செய்யணும், சொல்லு...

சரோ:- ஒண்ணுமில்லே... சும்மாயிருக்கற நேரத்தில் இந்த 'பாட்டில்'மூடியெல்லாம் கொரடை வெச்சுக் கழட்டிட்டு, 'பாட்டில்' எல்லாத்தையும் சோப்புத் தண்ணிலே போட்டு ஊறவையுங்க.

சுப்பு:- அவ்வளவுதானு... இன்னம் ஏதாவது உண்டா?

சரோ:- இப்போதைக்கு அவ்வளவு தான்... வேற ஏதாவதுன்னு அப்பப்ப சொல்றேன்.

சுப்பு:- இப்போதைக்கு அவ்வளவுதான்... மத்ததெல்லாம் அப்பப்பவாம்... 'இன்ஸ்டால்மெண்ட்'ல பாத்திரம், புடவை வாங்கி வாங்கி இதிலேயும் 'இன்ஸ்டால்மெண்ட் சிஸ்டமா'... அடக் கடவுளே!!!

காட்சி-3

(அதே இடம் - அதே நபர்கள்)

சரோஜா:- என்னங்க? இந்த பாட்டிலை அடுக்கடுக்கா வெச்சு ஒட்டறதுக்கு வெவ்வேற சைசு'ல கண்ணாடி வாங்கணுமாமே, சொல்லப்படாதோ?

சுப்புடு:- என்னங்க? இந்த பாட்டிலை அடுக்கடுக்கா வெச்சு ஒட்டறதுக்கு வெவ்வேற 'சைசு'ல கண்ணாடி வாங்கணுமாமே, சொல்லப்படாதோ?

சரோ:- என்னங்க இது?

சுப்புடு:- சொல்லப்படாதோன்னே, சொல்லிவிட்டேன்.

சரோ:- ஓஹோ... இப்பத்தான் நீங்க நேத்து ராத்திரி லேட்டா வந்ததுக்குக் காரணம் புரியுது.

சுப்புடு:- என்ன காரணம்? சொல்லேன்?

சரோ:- நேத்திக்கு நீங்க தூக்குதூக்கி படம் பாத்துட்டு வந்திருக்கீங்க. உண்மையைச் சொல்லுங்க... போனீங்களா ?

சுப்புடு:- இல்லே... ஆமாம்... ஆமாம்... அதெப்படி தெரிஞ்சுது ?

சரோ:- நான் சொன்னதைத் திருப்பிச் சொன்ன உடனேயே தெரிஞ்சுது.

சுப்புடு:- நுணலும் தன் வாயால் கெடும் பாங்க.

சரோ:- அதிருக்கட்டும்... நேத்திக்கு ஏன் பொய் சொன்னீங்க ?

சுப்புடு:- நான் ஒண்ணும் பொய் சொல்லலியே... நான் சொன்னதை நீ சரியாய்ப் புரிஞ்சுக்கலே... நேத்திக்கு நான் என்ன சொன்னேன்னு சொல்லு பார்க்கலாம் ?

சரோ:- வந்து...' நானும் என் 'செக்ஷன்'ல வேலே செய்யறவங்களும் கணேசன் ஒரு 'ஸ்டேட்மென்டை' 'வெரிஃபை' பண்றதை கவனிச்சுக்சிட்டிருந்தோம்னு சொன்னிங்க.

சுப்புடு:- நாங்க 'தூக்கு தூக்கி' பார்த்ததைத்தான் அப்படி சொன்னேன். அந்தக் கதையிலே (theme) 'தீம்' என்ன?...' கொண்டு வந்தால் தந்தை... கொண்டு வந்தாலும் வராவிட்டாலும் தாய் எட்செட்ரா... எட்செட்ரா... அந்த 'ஸ்டேட்மெண்டை' சிவாஜி கணேசன் சரிபார்க்கறதுதானே படம்... இதை நீ புரிஞ்சுக்கலேன்னு...

சரோ:- ஒங்க ஆபீஸர் பேர் கணேசன் தானே... அவரைச் சொன்னிங்கன்னு நிணேச்சேன்.

சுப்புடு:- அதுக்கு நான் என்ன செய்யறது? ஏமாறச்சொன்னது நானா ?

சரோ:- இருக்கட்டும்... இருக்கட்டும்... இந்த தடவை தப்பிச்சுட்டீங்க... அடடே... வந்த காரியத்தை மறந்துட்டேனே?... கண்ணாடி 'சைஸ்' எல்லாம் உங்க 'ப்ரண்ட்' ரங்கனாதன் வீட்டிக்குப் போயி பார்த்துகிட்டு வாங்க... என்ன முழிக்கிறீங்க? என் 'பிரண்ட்' அம்புஜம் வீட்டுக்குத்தான்... புரியுதா?

சுப்புடு:- புரியுது... 'பர்பெக்டா'ப் புரியுது. சரோ... சரோ... அப்பாடா... போயிட்டாளா... தப்பிச்சேன்... எங்க புயல் வீசப் போவுதோன்னு நெனச்சேன். கடவுளே! ரங்கனாதா! நன்றிடாப்பா... ஐயையோ ரங்கனாதன் வீட்டுக்குப் போகணுமே...

## காட்சி-4

(அதே இடம்—சுப்பு, சரோஜா, ரங்கனாதன்)

ரங்கனாதன்:- என்ன சுப்புடு... ஆபீஸ் விட்டு வீட்டுக்கு வந்தா ரெஸ்ட் எடுத்துகிட்டு ஹாய்யா இருப்பேன்னு பாத்தா... இது என்னப்பா, 'அரால்டைட்டியூபை'க் கையிலே ஒட்டிகிட்டு நிக்கறே?

சுப்புடு:- 'அரால்டைட்' வெச்சு பாட்டிலே ஒட்டப் போனேன்... அது என்னடான்னா எங்கையிலே ஒட்டிகிச்சு...

ரங்கனாதன்:- பாட்டிலே ஒட்டறயா? பாட்டில் ஒடஞ்சுட்டா என்ன? வேற பாட்டில் வாங்கப்படாது?

சுப்புடு:- அட நீ ஒண்ணு... எம் பொஞ்சாதி கோயில் கட்டறு... நான் கொத்தனார் வேலே பாக்கறேன்... ரங்கனாதா, எல்லாம் ஒன்னால வந்த விணைதான்... அன்னிக்கே சொல்லலியா...

ரங்க:- என்னாலயா?

சுப்புடு:- பின்ன என்ன? ஒன் 'ஒய்ப்' காலி பாட்டில்ல கோவில் கட்டினுங்களாம். ஒடனே நம்ம வீட்லேயும் சாமி கும்புடணுமாம். இந்த பொம்பளேங்களுக்குக் காபி சரியாப் போடத் தெரியுதோ இல்லேயோ நல்லாக் காபி அடிக்கத் தெரியுது...

ரங்க:- சுப்புடு... ஏன் இப்படி அலுத்துக் கறே? குடும்பம்னு நாலும்தான் இருக்கும். நான் வந்த விஷயம்... நாளைக்கு ஈவினிங் நம்ம 'பிரண்ட்ஸ்' எல்லாருமா படம் போறதா தீர்மானம் பண்ணியிருக்கோம். எல்லாரும் சரின்னுடாங்க... நீதான் பாக்கி. என்ன சொல்றே? நெஞ்சில் ஓர் ஆலயம் போறதா முடிவு பண்ணியிருக்கோம்.

சுப்புடு:- நெஞ்சில் ஓர் ஆலயமாம்... இங்கே வீட்ல ஒரு ஆலயம் கட்டி முடிஞ்சப்பறம் தான் அங்க இங்க நகர முடியும். 'சாரி'... நான் வரலே...

ரங்க:- நாளை 'ஈவினிங்' வரை 'டைம்' இருக்கு. வரமுடிஞ்சா 'டைரக்டா' தியேட்டருக்கு வந்திடு... நான் வரட்டுமா... டா... டா... (போகிறுர்)

சுப்புடு:- நல்ல நேரத்துக்கு வந்து சேந்தான்... போற வழியெல்லாம் நம்மபத்தி தண்டோரா போட்டுகிட்டே போவான்.

சரோ:- என்ன இது... நீங்கபாட்டுக்கு ஏதோ பேசிகிட்டே இருக்கிங்களே, ஏதாவது பைத்தியமா?

சுப்புடு:- பைத்தியம் இப்ப இல்லே... இந்தக் கோயில் கட்டி முடிக்கறதுக்குள்ளே புடிச்சுடும்..

சரோ:- புடிச்சாப் பரவாயில்லே... கோயில்லே ஒரு சாமி பொம்மை வெச்சுடறேன். ஒரு மண்டலம் தினம் குளிச்சுட்டு ஈரத் துணியோட விழுந்து கும்பிடுங்க... பைத்யம் தெளிஞ்சிடும்... சரி... சரி... வேலையைக் கவனிங்க ..

காட்சி-5

(அதே இடம்-அதே ஜோடி)

சுப்புடு:- (பாடுகிருன்)
விடுதலை, விடுதலை, விடுதலை,
பாட்டிலுக்கும் விடுதலை,
பசையினுக்கும் விடுதலை, - கோவில்
கட்டி முடித்த கணவன் இந்த
சுப்புவுக்கும் விடுதலை...
விடுதலை... விடுதலை...

சரோ:- (வந்துகொண்டே) என்ன இது? ரொம்ப குஷியாயிருக்கீங்க? ஆச்சரியமா இருக்கே!

சுப்பு:- நான் குஷியாயிருக்கிறது ஒனக்கு மட்டும் இல்லே... இந்த ஊருக்கே ஆச்சரியமாத்தான் இருக்கும்.

சரோ:- அட... அதுக்குச் சொல்லலே...

சுப்பு:- எதுக்குச் சொன்னு என்ன... கோவில் கட்டி முடிஞ்சாச்சு... இனிமே நிம்மதின்னு பாடிக்கிட்டிருக்கேன்.

சரோ:- முடிச்சாச்சா... வேலைத் தொந்தரவிலே கவனிக்கவே இல்லை.

சுப்பு:- வேலைத் தொந்தரவா... பலே! காலையிலே பத்து மணிக்கு வெளியிலே போனவ இப்ப 2 மணிக்கு திரும்பி வந்திருக்கே...

சரோ:- இந்த ஆம்பிளைங்களே இப்படித்தான். ஒரு 5 நிமிஷம் வெளியே தெருவே போனுல் பொறுக்காது. சரி... சரி... கோவில் நல்லாயிருக்கு. சாயங்காலம் மலைக்கோட்டைக் கடைக்குப் போயி ரங்கனுதர் பொம்மை ஒண்ணு வாங்கிகிட்டு வாங்க... அப்புறம் ஒரு சின்ன 'பல்ப்'... அதோட கொஞ்சம் 'ஒயர்' எல்லாம் வாங்கிகிட்டு வாங்க. என்ன?

சுப்புடு:- மலைக்கோட்டைலே ரங்கனுதர் ஏது? புள்ளையார்தான் இருப்பார்... ரங்கனுதர் ஸ்ரீரங்கத்லதான் இருப்பார்.

சரோ:- அடடடா.. எப்பப்பாத்தாலும் எடக்குத்தான்... மலைக்கோட்டைக் கடையிலே ரங்கனுதர் பொம்மை வாங்கிட்டு வாங்கன்னு சொன்னேன்.. எதுக்கெடுத்தாலும் ''ஆப்ஸென்ட் மைண்டட் புரொபஸர்'' மாதிரி ஏன் 'ஆக்ட்' பண்றீங்க?

சுப்புடு:- என்னது? 'ஆப்ஸெண்ட் மைண்டட் புரொபஸரா'? நில்லு... சரோ... சரோ...

சரோ:- என்ன?

சுப்புடு:- 10 மணிக்குப் போனவ ரெண்டு மணிக்கு வரே... பிளாசால "மார்னிங் ஷோ" என்ன? 'ஆப்ஸெண்ட் மைண்டட் புரொபஸர்'. 10 மணி - 2 மணி - பிளாசா... புரொபஸர்... 10 மணி - 2 மணி - பிளாசா... சரோ... சரோ...

சரோ:- எனக்கு வேலையிருக்கு... நான் உள்ளே போறேன்.

சுப்புடு:- நில்லு.. நில்லு.. புரிஞ்சுடுச்சு.. "ஆப்ஸெண்ட் மைண்டட் புரொபஸர்" எப்படியிருந்தார்?.. புருஷனை பாட்டில் ஒட்டச் சொல்லிவிட்டு நீ படம் பாத்துட்டு வரியா? ஓஹோ...

சரோ:- ஆமாம்.. போனேன்.. என்ன தப்பு..? நீங்க மட்டும் என்னவாம்? வாரத்துக்கு மூணு படம் போறீங்க? எல்லாத்துக்கும் 'லிஸ்ட்' எங்கிட்ட இருக்கு...

சுப்புடு:- ஐயையோ.. என் 'டைரி'யைப் பாத்துட்டயா?

சரோ:- எதுக்குக் கோபப்படறீங்க? ஒங்க கிட்ட சொல்லாம போனது தப்புதான்.. மன்னிச்சுடுங்க.. (போகிறாள்)

சுப்புடு:- என்ன இது? 'டாக்டிகல் வித் டிராயல் (tactical with drawal) பண்ணிட்டாளே. எனக்கு ஒண்ணுமே புரியலியே.. திடும்னு கோபப்படறா.. திடும்னு வெரட்றா.. அடுத்த நிமிஷம் கால்ல விழறா... சரோ... சரோ... எங்க அவ... ஆமா., இவ 'ஆப்ஸெண்ட் மைண்டட் புரொபஸர்' பாத்தாளா இல்லே 'கணவனே கண்கண்ட தெய்வம்' பாத்தாளா! உம்...

### காட்சி-6

[அதே இடம் - (அட கடவுளே!) அதே ஜோடி]

சுப்புடு:- சரோ... பூ, பழம், வெத்திலை பாக்கு எல்லாம் சரியா இருக்கா?

சரோ:- சரியா இருக்கு...

சுப்புடு:- ஒன்னோட பிரண்ட்ஸ் எல்லாம் எப்ப வரப்போறாங்க?

சரோ:- வர்றநேரந்தான்.. வரபோது அசட்டுபிசட்டுன்னு நிக்காதீங்க... பேசாம ஒங்க ரூமுக்குப் போயிடுங்க... என்னங்க? நான் பண்ணியிருக்கற கோவில் எவ்வளவு அழகாயிருக்கு பாத்தீங்களா? நான் பண்ணியிருக்கற இந்தக் கோவில் ரொம்ப அழகா அமைஞ்சுடுச்சு. இதுமாதிரி என் பிரண்ட்ஸ் ஒத்தங்க வீட்லேயும் அமையலே... அவங்க எதுக்கு வரப் போறாங்கன்னு கேட்டீங்களே? நான் பண்ணியிருக்கற இந்தக் கோவிலை அவங்களுக்குக் காட்டித் திகைக்க வைக்கணும் ஒரு தரம். அப்பறம்... இதேமாதிரி இன்னும் ஒண்ணு நான் பண்ணி என் தங்கச்சி வீட்...

சுப்புடு:- இன்னும் ஒண்ணு...?

சரோ:- ஐயையோ... என்ன இது மயக்கம்போட்டு விழுந்துட்டாரே...

[இதில் வரும் பாத்திரங்கள் யாரையும் குறிப்பிடுவன அல்ல... முக்கியமாக என்னையும், என் மனைவியையும் குறிப்பிடவே, குறிப்பிடாது]

வானொலி - இளைஞர் உலகம்
திருச்சி ஜூனியர் சேம்பர்

---

" அழுக்கைத்துடைத்து மேற்பரப்பை முன்னைவிடத் தூய்மையாக்கும் விளக்குமாற்றைப்போலத்தான், தவற்றை ஒப்புக்கொள்ளும் தன்மை " — மகாத்மா காந்தி

# பசுமைப்புரட்சியில் உரத்தின் பெரும்பங்கு

— டாக்டர் பி. பி. பால் —

மனித சமுதாயத்தின் வரலாற்றிலேயே என்றும் இல்லாதபடி இன்று மக்கள் தொகை பெருகி வருகின்றது. இப்பெருக்கத்தின் அளவு மிகவும் கவலைக்குரிய விஷயமாக இருக்கின்றது. இதனால் இனி என்றும் உணவுத் தேவையின் அளவு அதிகமாகிக்கொண்டே இருக்கும். உயிர்கள் பெருக்கத்திற்கும், விவசாயத்திற்கும் என உலகில் உள்ள இடமோ மிகக் குறைவு. அதிக நிலத்தைச் சாகுபடியின் கீழ்க் கொண்டுவந்து உற்பத்தியைப் பெருக்குவது என்பது இந்தியா போன்ற மக்கட்பெருக்கம் உள்ள வளரும் நாடுகளின் சக்திக்கு உட்பட்டதல்ல. ஆகவே ஏக்கர் உற்பத்தித் திறனை அதிகரிப்பதுதான் உற்பத்திப் பெருக்கத்திற்கு ஏற்ற ஒரே வழியாகும்.

அதிக உரமிட்டால் அதிக விளைச்சலைத் தரக்கூடியதான வித்து ரகங்களை உண்டாக்கி நாட்டின் உற்பத்தியைப் பெருக்க முடியுமென்ற நம்பிக்கை ஒளி நமது கடந்த ஐந்தாண்டுகால அனுபவங்களிலிருந்து நமக்கு ஏற்பட்டிருக்கிறது. இரசாயன உரங்களை அதிகமாக ஏற்று அவைகளை மனிதர்களுக்கும், பிற உயிர்களுக்கும் வேண்டும் நல்லுணவாக மாற்றித்தரும் வேலையை அந்தத் திருந்திய ரகங்கள் ஆற்றுகின்றன. எனவே ஏற்ற விதையினைக் கண்டறிந்த பின்னர் உற்பத்தியைப் பெருக்க அடுத்து நிற்பது உரமேயாகும். இவற்றில் நைட்ரஜன் சத்தைத் தன்னுள்கொண்டுள்ள உரங்களே தலையாய பங்கு வகிக்கின்றன.

முன்னேறிய நாடுகள் அதிக அளவு உரத்தை உபயோகித்தன்மூலம் அதிகமான வெற்றியை அடைந்தனர். ஒரு பக்கத்தில் அதிக உற்பத்தித்திறனுடைய விதையினைக் கண்டுபிடிக்கும்பொழுது மறு பக்கத்தில் எருக்களையும், உரங்களையும், சிறப்பாக நைட்ரஜன் சத்துக்கள் அடங்கிய உரத்தையும் உபயோகிப்பதை அடிப்படையாகக்கொண்டு விஞ்ஞான ரீதியில் பயிடுரிம் முறையைக் கடைப்பிடித்தல் அவசியம். அதிக மகசூலைத் தருகின்ற திருந்திய விதையுடன் முறையான உரச்சேர்க்கையே அதிக உற்பத்தியைப் பெறுவதற்கான திறவுகோலாகும்.

இந்திய மண்ணில் நைட்ரஜன் சத்துக் குறைவாகக் காணப்படுகின்றது. பாஸ்பேட்டும், பொட்டாஷும் பற்றுக்குறையாகவே காணப்பட்டபோதிலும் இவை நைட்ரஜனைப்போன்று அவ்வளவு அதிகம் பற்றுக்குறையாக இல்லை. உச்ச அளவு உற்பத்தியைப்பெற அங்கக எரு முதலாயினவும் பயன்படும். எனினும் சமன் செய்த உரக் கலவையைக் கொண்டு மண்ணை வளப்படுத்தி அதிக விளைச்சலை உண்டாக்குவதற்கு மாற்றான வேறு நல்ல வழிகள் இதுவரை இல்லை. எனவே அதிகமான உரம் கிடைக்கச் செய்வதின் மூலமும், அவற்றை முறையாக பயன்படுத்துவதின் மூலமுமே இன்று உணவுப் பிரச்னையில் ஏற்பட்டுள்ள நெருக்கடியைச் சமாளிக்கவேண்டியிருக்கிறது.

நவீன சாகுபடி முறை, நவீன எந்திரங்களையும் அதன் கண்டுபிடிப்புக்களையும் சார்ந்திருக்கின்றது. இவற்றை விவேகமான முறையில் கையாள்வதன்மூலம் ஒரே அளவு நிலத்தில் ஒரே மாதிரியான உழைப்பைக்கொண்டு ஒவ்வொரு ஹெக்டேர் நிலத்திலும் பன்மடங்கு அதிகப் பயனைப் பெறமுடியும். அதிக உற்பத்தித்

திறனுடைய விதைகளின் முழுப் பயனையும் நாம் அடைய, அந்நிலத்திற்கும், அப்பருவநிலைக்கும் ஏற்றதான தீவிர விவசாய வழிமுறைகளைக் கையாளுதல் அவசியம். விஞ்ஞானத்தின் உதவியுடன் முறையாக உரமிட்டு விவசாயம் செய்வோமானால் பெருகிக்கொண்டிருக்கும் மக்கள் தொகைக்கு உணவளிப்பதோடு மட்டுமல்லாமல் விவசாயத்தை நம்பிய பல தொழில்களையும், நம்மால் நிறுவ முடியும். இதற்கு நாம் புதிய யுக்திகளையும், சமன் செய்யப்பட்ட உரங்களையும் உபயோகித்தல் அவசியமாகும். இதனால் மக்கள் பெருக்கக் கட்டுப்பாட்டு முயற்சிகளைக் குறைக்கலாம் என்ற பொருள் இல்லையாயினும் இன்று நமக்குக் கிடைத்திருக்கும் அறிவை நன்கு பயன்படுத்துவோமாயின் எதிர்காலத்தில் பெருகவிருக்கும் மக்கள் தொகைக்குக்கூட உணவளிக்கும் ஆற்றல் நம்மிடம் வந்துவிடும் என்பதேயாகும்.

தாவர இன விருத்தியாளர்கள் மற்ற விஞ்ஞானிகள் கூட்டு முயற்சியுடன் மிக அதிக விளைச்சலைத் தரக்கூடியதும், நோய் நொடிகளைச் சமாளிக்கும் ஆற்றலுடையதுமான திருந்திய வித்து ரகங்களைக் கண்டுபிடித்து அவைகளை விவசாயிகளுக்குக் கிடைக்குமாறு செய்ய முயன்று வருகிறார்கள். நோய்கள், பூச்சிகள் முதலியவற்றைத் தடுக்கவல்ல ரசாயனக் கலவைகளையும், உரச்சேர்க்கைகளையும், முறையாகப் பயன்படுத்துவதன் மூலம் தான் நாம் விதையிலிருந்து முழுப்பயனையும் அடையமுடியும்.

நடப்புடைய பத்தாண்டுத் தொடக்கத்தில் நாம் நீர்ப்பாசன வசதியுடைய பகுதிகளின் ஏக்கர் உற்பத்தியை அதிகப்படுத்துவதுடன், பாசன வசதியற்ற மற்ற பகுதிகளின் உற்பத்தியையும் அதிகப்படுத்தவேண்டும். அப்போதுதான் மொத்தத்தில் உண்மையான உற்பத்திப் பெருக்கம் காணமுடியும். வறண்ட பிரதேசங்கள், அதிக மழைப் பிரதேசங்கள் முதலியவற்றில் நாம் முழுக்கவனத்தையும் செலுத்தி அங்கும் எல்லாப் பருவங்களுக்கும் ஏற்றதும் அதிக விளைச்சலைத்தரக்கூடியதுமான நல்ல தரப்பயிர்களைக் கண்டுபிடிக்க விஞ்ஞானிகள் முயற்சி செய்யவேண்டும். விவசாயத்தில் மாபெரும் திருப்பத்தைக் காண மானம்பார்த்த பிரதேசங்களில் கூட உரமிடுதல் அவசியம் என்பதில் சந்தேகத்திற்கே இடம் இல்லை.

பல நூற்றாண்டுகளாகவே தோட்டக்கால் பகுதிகளில் பயிர்ச்சத்துக்களுக்கான தேவை அதிகமாக இருந்து வருகிறது. உரமிட்டு நிலத்தைப் பண்படுத்தல், தழை, மட்கு முதலியவற்றைப் பரவிவிடல் முதலியவற்றால், வறண்ட பகுதிகளில் அதிகமான விளைச்சலை ஏற்படுத்த முடியும்.

நமது உணவில் கலோரியின் பற்றுக்குறை மட்டுமல்ல, புரதச்சத்து, கொழுப்புச்சத்து ஆகியவைகளின் பற்றுக்குறையும்

மிகத் தீவிரமாக இருக்கின்றது. நமது நாட்டின் பெரும்பான்மையான மக்கள் மரக்கறி உண்போராதலால், நாம் காய்கறிகளில் புரதச்சத்தை அதிகரிக்க முயற்சி செய்யவேண்டும். வெறும் தானிய உற்பத்தியை பெருக்குவதோடு மட்டும் நில்லாமல் அவற்றின் தரத்தையும் உயர்த்த நாம் முயற்சி செய்யவேண்டும். அவரையினப் பயிர்களை விருத்தி செய்வதில் பாஸ்பேட் உரங்கள் முக்கியப் பங்காற்ற முடியும். அதிக உரத்தை உபயோகிப்பதன் மூலம் நிலக்கடலை போன்ற எண்ணெய் வித்துப் பயிர்களின் உற்பத்தியை அதிகரிக்கலாம்.

இந்தியாவின் மேற்குப் பிராந்தியத்தில் ஏற்படுத்தியிருக்கின்ற பால் உற்பத்தி அதிகரிப்பு இயக்கம் கால்நடைத் தீவனத்தின் உற்பத்தியையும் அதன் தரத்தையும் பொறுத்திருக்கின்றது. தானியங்கள், கால்நடை தீவனங்கள் முதலியவற்றின் உற்பத்தியில் பொட்டாஷும், பாஸ்பேட்டும், பருப்பு அல்லாத மற்றவற்றின் உற்பத்தியில் பாஸ்பேட்' நைட்ரஜன் பொட்டாஷும் சேர்ந்த கலவையும் முக்கிய பங்கு வகிக்கின்றன.

இந்தியா போன்ற வளரும் நாடுகளில் விவசாயத்தை நவீனமய தொழிலாக ஆக்குவதன் மூலம் நம்முடைய உணவுப் பிரச்சினையைச் சமாளிக்க முடியும். அத்துடன் நமது தொழில் வியாபாரம் இவைகளையும் இதன் மூலம் ஆதரிக்க முடியும். இந்தியாவில் ஏற்கனவே உணவு உற்பத்தியில் திடீர்ப்பெருக்கம் தோன்றி வருவதைக் காண்கிறோம். இந்த நல்ல தொடக்கத்தை மேலும் விரிவாக்கவும், தீவிரமாக்கவும் நாம் நமது தேவையான சௌகரியங்களை சரியான அளவிலும், சரியான தரத்திலும், முறையான காலத்திலும் உண்டாக்கிக் கொள்வது அவசியமாகிறது. இவற்றுள் உரமே முக்கிய இடத்தை வகிக்கின்றது என்பதைக் கூறவும் வேண்டுமோ?

எனது பழைய நினைவுகள் : 3

# கான்சாகிப் கருப்பையா

— கோவை அ. அய்யாமுத்து

வெள்ளைக்காரன் இந்த நாட்டை ஆண்டிருந்தபோது தனக்கு வேண்டிய வர்கட்கெல்லாம் பட்டங்களும் பதவிகளும் வழங்கினான்.

ஆட்சியாளரின் அடிவருடிகள்தான் பிரிட்டிஷ் ஆட்சிக்கு வேண்டியவர்களா கக் கருதப்பட்டனர்.

ராவ்சாகப், ராவ்பஹதூர், திவான் பகதூர், கான் சாகிப், கான் பகதூர், சர் ரைட் ஹானரபுள், அப்படி, இப்படி யென்று எத்தனையோ பட்டங்கள் வழங் கப்பட்டன.

மாட்சிமை தங்கிய பிரிட்டிஷ் மன்ன ரின் பிறந்த நாளன்றும், புத்தாண்டு தினத்திலும் இப்பட்டங்கள் அறிவிக்கப் பட்டன.

அக்காலத்தில் வானொலி நிலையங்கள் இருக்கவில்லையாதலால், பட்டம் பெற்றவர் களின் பெயர்கள் தினசரித்தாள்களில் தான் பிரசுரிக்கப்பட்டன.

பட்டங்களை எதிர்பார்த்துக்கொண் டிருந்தவர்கள் குறிப்பிட்ட நாட்களுக்காகக் காத்திருந்தார்கள்.

ரயில் வண்டி வந்து நின்று, நியூஸ் பேப்பர் கட்டுகள் இறக்கப் பட்டதும், ஒரு வரையொருவர் முந்திக்கொண்டு பேப் பர்கள் வாங்கிப் பிரித்துக் கண்களை அகல விரித்துத் துருவித் துருவிப் பார்த்தார்கள்.

பட்டங்கள் அளித்தது பிரசித்தமான பிறகு ஒரு குறிப்பிட்ட தேதியில் ஜில்லாக் கலெக்டர் ஒரு தர்பார் நடத்தி பட்டம் பெற்ற பிரமுகர்களுக்குப் பலர் முன்னிலை யில் சன்னதுகளும் சான்றுகளும் வழங்கு வார்.

யார் யாருக்குப் பட்டங்கள் வழங்க லாம் என்று சிபார்சு செய்கின்றவர் படிப் படியாக மேல் மட்டத்திற்குச் சென்று ஒவ்வொரு மட்டத்திலும் வடிகட்டப்பட்டு, இறுதியில் இலண்டன் மாநகரிலிருந்து மாட்சிமை தங்கிய மன்னரின் பேரால், பிரிட்டிஷ் சாம்ராஜ்ய பிரஜைகளுக்குப் பட்டங்கள் வழங்கப்பட்டன.

எனவே ஜில்லாக் கலெக்டர்கள்தான் மூலஸ்தானம் என்றால் பார்த்துக்கொள் ளுங்களேன். அந்தக் காலத்தில் ஜில்லா கலெக்டர்கள் மாட்சிமை தங்கிய பிரிட் டிஷ் மன்னரின் உற்சவ மூர்த்திகளாக ஜில்லாக்கள் தோறும் பவனிவந்தார்கள். ஜனவரி முதல்தேதியன்று ஜில்லா தலை நகர்களில், கலெக்டர் பங்களாக்களில் ஜனத்திரள் – பிரமுகர்களின் கூட்டம்-எக் கச் சக்கமாக இருந்தது. மலர் மாலைகளும், கேக்குகளும், பழங்களும், பிராந்தி வுஸ்கி புட்டிகளும், கூடை கூடையாகக் கலெக் டர்களுக்குக் கொண்டுபோய்க் கொடுத்து புத்தாண்டு வாழ்த்துக்கள் தெரிவித்தார் கள்.

அந்தக்காலத்துக் கலெக்டர்களுடன் இந்தக்காலத்துக்கலெக்டர்களின் நிலையை எண்ணிப்பார்த்தால், எனக்கே கண்களில் தாரை தாரையாய் கண்ணீர் சொரிகின்ற தென்றால்...?

பட்டம் பெற வேண்டுமென்று ஆசைப்படுகின்றவர்களில் சிறந்த கல் வியோ, பேச்சு வன்மையோ, பொதுநலச் சேவையோ, இல்லாதவர்கள், ஜில்லாக் கலெக்டர்களின் கவனத்தை ஈர்க்க வேறு பல உபாயங்களை அக்காலத்தில் கையாண் டார்கள்.

பிரசவ விடுதியொன்று கட்டுவார்கள். அல்லது குழந்தைகளுக்குப்பால் வழங்குவதாக விளம்பரம் செய்து தினம் பத்துக் குழந்தைகளுக்குப் பால் விநியோகிப்பார்கள். மருத்துவமனை, கால்நடை ஆஸ்பத்திரி, பள்ளிக்கூடம் ஆகியவற்றில் சில அபிவிருத்தி செய்வார்கள். ஒரு ஜட்கா ஸ்டாண்டு, ஒரு தண்ணீர்த்தொட்டி, இப்படி ஏதாவதொன்றைக்கட்டி, அதற்கு ஜில்லாக் கலெக்டரைக்கொண்டு திறப்பு விழா நடத்துவார்கள். அல்லது யுத்த நிதிக்கு ஐயாயிரம் பத்தாயிரம் கொடுப்பார்கள்.

ஆங்கில ஞானமிருந்தால் கால் சட்டை, மேல்சட்டை, டை, காலர், ஹாட், பூட் அணிந்து கொள்வார்கள். இல்லாவிட்டால் எட்டுமுழ வேஷ்டி மூலைக் கச்சம் வைத்துக்கட்டி, காலிலே பளபளப்பான சிலிப்பரும், உடலிலே முழங்கால்வரை தொங்கும் லாங்கோட்டும், தலையிலே ஜரிகைத் தலப்பாவும், தோளிலே தொங்கும் அங்கவஸ்திரமும் அணிந்துகொண்டு செல்வார்கள். உடல் வாட்ட சாட்டமாகவும், நிமிர்ந்த நடையும், நேரான பார்வையும் இருந்தாலும் அதனைப் பொருட்படுத்தாமல், மூக்குக் கண்ணாடி அணிந்து வெள்ளிப் பூண் போட்ட பிரம்பினைப்பிடித்து நடப்பார்கள்.

இவ்வாறு பட்டத்துக்கு ஏங்கின பிரமுகர்கள் எண்ணிலும், ஏட்டிலும் அக்காலத்தில் அடங்கார். அத்தகையவர்களில் ஒருத்தரைக் கருத்தில் கொண்டு, அடியேன் 1932ம் ஆண்டு கோவைச் சிறைச்சாலையில் 969 நெம்பர் கைதியாக இருந்தபோது ஒரு கதை எழுதி முடித்தேன்.

அக்கதைக்கு நான் கொடுத்த பெயர் தான் கான்சாகிப் கருப்பையா.

1933 வருஷம் சிறையினின்று வெளிவந்ததும் அப்போது சென்னையினின்று பிரசுரிக்கப்பட்டு வந்த 'தமிழ்நாடு' தினசரிக்கு அக்கதை முழுவதையும் அனுப்பி வைத்தேன். அந்நீண்ட கதை இந்த 'சிவாஜி' மலரில் அச்சிட்டால் நூறுபக்கங்கட்குக் குறையாமல் இருக்கும். 'தமிழ்நாடு'' பத்திரிகை அதன் ஆசிரியர் டாக்டர் பி. வரதராஜுலு நாயுடு அவர்களுக்குச் சொந்தம். திரு. டி. எஸ். சொக்கலிங்கம் அப்பத்திரிகையின் உதவி ஆசிரியராகவிருந்தார்.

ஒரு சனிக்கிழமை எனது கதையின் பிரசுரம் ஆரம்பமாயிற்று. சனிக்கிழமை தோறும் தொடரும் என்றும் அறிவிக்கப்பட்டது.

கதையின் ஆரம்பத்திலேயே வாசகர்களில் பலர் கதாநாயகனை இனங்கண்டு கொண்டார்கள். மற்றவர்களுக்கும் சொன்னார்கள். ஆரம்ப கட்டத்திலேயே கதை சூடுபிடித்துவிட்டது. கோவை நகருக்கு தமிழ்நாடு பத்திரிகை நாற்பது பிரதிகளே வந்துகொண்டிருந்தன. அதன் ஏஜண்ட் நாராயணசாமி ராஜுவின் கடை சோலிக் கடை முக்கில் இருந்தது. கருப்பையா கதை தாங்கிவந்த பத்திரிகை வாங்கக் கூடின ஜனத்திரள் சொல்லிமுடியவில்லை. மேலும் அதிக காபிகள் வேண்டுமென்று சென்னைக்குத் தந்தி பறந்தது. மூன்றுவது வாரம் கோவையில் 400 பிரதிகள் வந்தும் போதவில்லை. பிரதியொன்று நான்கணுவுக்கும் விற்கப்பட்டது. பெரிய மனிதர்கள் கார் போட்டுக்கொண்டு பேப்பருக்கு அலைந்தார்கள். தெற்கே திருநெல்வேலி வரைக்கும் இதே கதிதான். எங்கும் ஒரே பரபரப்பு. காஸ்மோபாலிடன் கிளப்புகள், ஹோட்டல்கள், சிற்றுண்டிச் சாலைகள், எங்கும் கான்சாகிப் கருப்பையாவின் பெயர் அடிபடலாயிற்று. என் பெயரையும் ஒரு புனைப்பெயராகப்போட்டிருந்தால் நன்றாய் இருந்திருக்கும் என்பது எனக்கு அப்போது தெரியவில்லை.

கருப்பையா எனும் பெயர் நான் வைத்த புனைப் பெயராயினும், அது காரண இடுகுறிப் பெயராகிவிட்டது. கதா நாயகர் அவரது பெயருக்கேற்றபடி நெருப்பைக்

குளிப்பாட்டியது போலிருப்பார் என்று வர்ணித்திருந்தேன்.

கதாநாயகர் பிறந்து வளர்ந்த ஊருக்கும் மாற்றுப் பெயர்தான் கொடுத்திருந்தேன். அங்கே தெப்பக்குளமும், தேரோடும் வீதிகள் நான்கும், நடுவிலே சுப்ரமணிய சுவாமி கோவிலும், அக்கோவிலைச் சுற்றித் தேவதாசிகளும் குடியிருந்தனர் என்று எழுதியிருந்தேன். ஆதலால் தமிழ்நாடு வாசகர்கள் ஊரையும் ஊகித்துக் கொண்டார்கள்.

கதாநாயகர் செய்த தொழிலையும் குறிப்பிட்டிருந்தேன். அவர் மனைவி ரொம்பவும் ஓல்டு மாடல், அவர்கள் பெற்றெடுத்த பையனின் ஒரு காலும் நொண்டி. வெளியூர் செல்லும்போது தன்னுடு பிரயாணம் செய்ய அவர் ஒரு தாசிப் பெண்ணையும் வைத்திருந்தார் என்ற சேதியும் சொல்லியிருந்தேன்.

மற்றும் அவர் பணந்திரட்டச் சாதித்த பொய் பித்தலாட்டங்கள் அனைத்தும் விவரித்திருந்தேன். அம்மனிதன் யார் என்று மக்கள் புரிந்துகொண்டார்கள்.

கதை பிரதி சனிக்கிழமையும் 'தமிழ்நாடு' தினப் பத்திரிகையில் சென்னையிலிருந்து பிரசுரமாகிக் கொண்டிருந்தது.

பலவூர்களிலிருந்து எனக்குப் பாராட்டுக் கடிதங்களும், பயமுறுத்தல் கடிதங்களும் வந்து கொண்டிருந்தன.

தங்கள் கதையில் இதனையும் சேர்த்துக் கொள்ளுங்கள் என்று கோவை காங்கிரஸ் ஊழியர் சி. பி. சுப்பையா சில விஷயங்கள் எழுதி எனக்கனுப்பினர்.

கருப்பையாவின் தாசி ஒரு மாடிவீட்டில் குடியிருந்ததாகவும், இராக் காலங்களில் கருப்பையா அங்கு சென்று சிறிது நேரம் தங்குவாரென்றும், அச்சமயங்களில் தாசி வீட்டு மேல் மாடியில் சிவப்பு நிறமுள்ள பல்ப் எரிந்து கொண்டிருக்குமென்றும், கருப்பையா சென்றவுடன் சிவப்பு விளக்கு அணைக்கப்பட்டு, பச்சை விளக்கு போடப்படுமென்றும், அதன்பின் அந்த தாசிப்பெண்ணின் ஆசை நாயகன் ஆப்ரகாம் அங்கு சென்று சயனிப்பது வழக்கமென்றும், ஒரு நாள் கருப்பையாவும் ஆப்ரகாமும் எதிர்முட்டு முட்டிக் கொண்டதாகவும், இந்தக் கருமத்தைப் போக்கக் கருப்பையாவும் தாசியும் காசிக்குச் சென்று இலங்கையில நீராடி வந்ததாகவும், ஆப்ரகாமும் அவளைப் பின் தொடர்ந்து சென்று கங்கையில் குளித்து, பூஜை புநஸ்காரங்கள் செய்து தனது பெயரைப் பரமேஸ்வரன் நாயர் என்று மாற்றிக்கொண்டு, பட்டை பட்டையாய் விபூதியும், கழுத்தில் ருத்ராட்சமாலையும் அணிந்துகொண்டதாகவும் சி. பி. சுப்பையா எழுதியிருந்த செய்திகள் எனது கதையில் ஏற்கனவே சேர்க்கப்பட்டிருந்த செய்தி சுப்பையாவுக்குத் தெரியாது.

உதகமண்டலத்திலே நீலகிரி டெய்ரி பாரம் சொந்தக்காரர் ஸ்ரீ முத்துச்சாமி முதலியார் எனக்கு மிகவும் வேண்டியவர். ஒருநாள் இரவு அவர் என்னைத் தேடிக் கொண்டுவந்தார்.

வாருங்கள் ''மாமா''வென்று அவரை அன்புடன் வரவேற்று உபசரித்தேன். அன்றிரவு போஜனத்தை முடித்துக் கொண்டு அவர் என்னுடனேயே திருப்பூர் 'தோல் ஷாப்' என்னுமிடத்தில் தங்கினர்.

ரொம்பவும் ரகசியமாக ஒரு விஷயம் சொன்னர்.

கருப்பையா கதையைத் தொடர்ந்து பிரசுரம் செய்வதை நிறுத்திவிட்டால் ஐநூறு ரூபாய் தரப்படும் என்று காதோடு காதாகச் சொன்னர்.

காரியம் நடவாதென்று ஊர்ஜிதம் செய்து கொண்டு மறுநாள் காலையில் போய்விட்டார்.

அடுத்தநாள் எனது கதாநாயகர் கருப்பையா சென்னைக்குச் சென்றார். டாக்டர் வரதராஜுலு நாயுடுவைப் பார்த்

தார். "தமிழ் நாடு" பத்திரிகை நிதிக்கு ஆயிரம் ரூபாய் நன்கொடை கொடுத்து விட்டுத் திரும்பினர்.

அந்த வாரம் சனிக்கிழமை வழக்கம் போல் கருப்பையா கதை தொடர்ந்து தமிழ்நாடு பத்திரிகையில் பிரசுரம் செய்யப் படவில்லை.

அதற்குரிய காரணமும் அறிவிக்கப் படவில்லை.

தந்திகளும், கடிதங்களும் ஏன், ஏன், எனக்கேட்டு எனக்கு வந்து குவிந்தன. சென்னை "தமிழ்நாடு" காரியாலயத்துக் கும் தந்திகள் போயின.

எனக்கு வந்த தந்திகளையும் கடிதங் களையும் வரதராஜுலு நாயுடுகாருக்கு அனுப்பிவைத்தேன்.

"தமிழ்நாடு" பத்திரிகையில் ஒரு அறிக்கை வெளியாயிற்று.

"பிரதி வாரம் சனிக்கிழமை தோறும் பிரசுரமாகி வந்த தொடர்கதை இடமின் மையால் சென்ற வாரம் பிரசுரிக்கப்பட வில்லை. அடுத்த வாரத்திலிருந்து, புதன் கிழமையும், சனிக்கிழமையும், ஆக வாரத் தில் இரண்டு நாட்கள் அக்கதை தொடர்ந்து பிரசுரிக்கப்படு"மென்று அவ் வறிக்கையில் தெரிவிக்கப்பட்டிருந்தது.

அவ்வாறே அக்கதை முடிவு வரை பிர சுரமும் ஆயிற்று.

கருப்பையாவை நான் என் கதையில் உயிரோடு விட்டுவைக்கவில்லை.

மன்னர் பிறந்த நாள் வெளிவந்த பத்திரிகையை கருப்பையா மிக்க ஆவ லுடன் பார்க்கிறர். ராவ்சாகிப் பட்டங் கள் அளிக்கப்பட்டவர்களின் வரிசையில் அவர் பெயர் காணப்படவில்லை. ஆத லால் மனம் சோர்ந்து கட்டிலில் கண்ண யர்ந்து சாய்கிறர்.

அவருடைய செல்வமகன் பத்திரிகை முழுவதையும் துருவித்துருவிப் பார்த்த போது 'கான்சாகிப்' பட்டம் பெற்றவர் களின் மத்தியிலே தன் தகப்பன் பெயர் அச்சடிக்கப்பட்டிருந்ததைக் கண்டு பிடித்து, அப்பா! அப்பா! என்று ஆவேசத்தோடு அப்பனிடம் சொல்ல ஓடினன். ஆனல் அப்பன் ஆவி பிரிந்து நெடுநேரமாகியிருந்தது.

அதுதான் கதையின் முடிவு.

அக்கதைக்குப்பிறகு, "தமிழ்நாடு" பத்திரிகையில் என்னல் மொழி பெயர்க்கப் பட்ட "மேவாரின் வீழ்ச்சி" Light Shines in Darkness என்ற கதையின் மொழி பெயர்ப்பாகிய "இருளில் ஒளி"யும் தொடர்ந்து பிரசுரம் செய்யப்பட்டன.

இதன்பின் ஒருநாள் கோவைப் பிரமுகர் தி. அ. இராமலிங்கம் செட்டியார் என்னைத் தேடித் திருப்பூருக்கு அதிசய மாக வந்தார்.

அடுத்த கதை எப்போது என்று கேட்டு ஆச்சர்யத்தில் ஆழ்த்தினர்.

தங்களைப்பற்றி எழுதமாட்டேன் பயப்படாதீர்கள் என்று சொன்னேன்.

அவர் மட்டும்தானு அப்படிக் கேட் டார். திருப்பூர் தி. சு. கந்தசாமி செட்டி யார், கே. எஸ். ராமசாமிக்கவுண்டர், P. D. ஆஷர்சேட், கோவை. C. S. ரத்தின சபாபதி முதலியார், V. C. வெள்ளியங் கிரிக்கவுண்டர், ஆர். கே. சண்முகம் செட்டியார், M. சம்பந்த முதலியார், வக்கீல்கள் கோபால் பிள்ளை, வேணு கோபால் பிள்ளை, C. K. சுப்ரமணிய முதலியார், த. கிருஷ்ண செட்டியார், பொள்ளாச்சி ரத்தின சபாபதிக்கவுண்டர், முதலியோர் என்னைக் கண்டபோதெல் லாம் சிரித்துக்கொண்டே இதே கேள்வி யைக் கேட்டுக்கொண்டிருந்தனர்.

இன்றைய தினமும் ஜி. டி. நாயுடு என்னைக்கண்டால் என்ன கான்சாகிப் என்று குசலம் விசாரிப்பார்!

# சந்தோஷம்

— வல்லிக்கண்ணன்

மாலை நேரத்தில், மேல வானில், சீக்கிரமாக - முதன் முதலாக - பார்வைக்குத் தென்படுவது 'அந்தி வெள்ளி'

வெளிச்சம் பரவிய சூழ்நிலையில் மங்கலாக, உல்லாசம் மிகுந்த குழந்தை முகம் மாதிரி, அது எட்டிப் பார்ப்பதாக எனக்குத் தோன்றும்

உலக வெளிச்சம் மங்கி, இருள் வலுப்பெற்று வளரவளர, அந்த வெள்ளி ஒளி அதிகமேற்றுச் சுடர் வீசும். மேல் வானில் தனியாக, மிகப் பிரகாசமாக, மிளிர்கிற அதைப் பார்த்துக் கொண்டிருப்பதே ஒரு சந்தோஷம் தான்.

ஒளி நிறைந்த அதைத் திலகமாகக் கொண்ட ஒரு எழில் நெற்றியை, அதற்குத் தகுந்த கண்களை, அழகு முகத்தைக் கற்பனை செய்ய முயலும் என் மனம்.

பிரகாசம் மிகுந்த அந்த நட்சத்திரத்தை மூக்குத்தியாக அணிந்து கொண்டு ஒளிரும் எடுப்பான மூக்கையும், அதற்குரிய கன்னங்களையும், முகத்தையும் காண முயலும், சில சமயம்.

பேரொளி தெறிக்கும் அந்த வான் வைரத்தைக் காதணியாகக் கொண்ட ஒரு அழகுக் காதை, அதை ஒட்டிய கன்னத்தை, காதைத் தழுவிக் கிடக்கும் கருங்குழலை, இவற்றைக் கொண்ட எழில் முகத்தின் ஓர் புறத் தோற்றத்தைக் காண முயலும் என் கற்பனை.

மிகுந்த ஒளி வீசிச் சுடரும் அந்த நட்சத்திரத்தை எடுப்பான பதக்கமாகக் கொண்டு எழில் பெறும் மார்பை, அப்படி எடுப்பான பதக்கம் கொண்ட அழகிய சங்கிலியை அணிந்த கழுத்தை, அக்கழுத்துக்கு உரிய வனை, கனவு உருவமாய் காண முயலும் அது.

ஆள் அரவமற்ற தெருவில், வாசல் படியில், தனியாக உட்கார்ந்து பொழுது போக்கும் எனக்கு, முன்னிரவில், இது ஒரு ரசமான விளையாட்டு.

மேகம் அழுக்குப் போர்வையாய் வானத்தை மூடிக் கிடந்த நாட்களில், மழை நீங்காத அழுகையாய் வெளியை, மண்ணை எல்லாம் நனைத்துக் கொண்டிருந்த தினங்களில், வானவீதி நட்சத்திரக்கற்கள் தெரியாத மந்தமான பரப்பாக விரிந்து கிடந்த இருண்ட போதுகளில், பிரகாசமான அந்தி வெள்ளியும் பார்வையில் படாமலே போய்விட்டது.

ஒளியுறுத்தும் ஒரு இனிய முகத்தை நாள் கணக்கிலே காண முடியாமல் போன ஒரு நிலை. ஐந்தாறு நாட்களாக வான வெளியில் சிறுசிறு நீலத் திட்டுகளைக் கூடக் காண இயலாமல் போனது வருத்தம் அளிக்கத்தான் செய்தது.

ஒருநாள் மழை குறைந்து, வானக் கடலில் நீலப்பூக்கள் பளிச்சிட்டன. மனசிலும் மகிழ்ச்சி பூத்தது.

அன்று, மேலவானில், அந்தி வெள்ளி மிகப் பிரகாசமாக ஒளிர்ந்தது.

காணமுடியாமல் போயிருந்த அழகு முகத்தை-ஒரு அன்பு உருவை-நண்பனை எதிர்பாராது கண்டது போன்ற சந்தோஷம் ஏற்பட்டது எனக்கு.

---

ஆசிரியர் கோழையாக இருந்தால், அவர் தமது மாணவர்களை வீரர்களாக்க முடியாது. சுய கட்டுப்பாடு என்றால் என்ன என்று தெரியாத ஒருவர் தமது மாணவர்களுக்கு சுய கட்டுப்பாடு பற்றி சொல்லிக் கொடுக்க முடியாது.

— மகாத்மா காந்தி

# கற்பனையின் விளையாட்டு

அற்புதம் பூத்துக் குலுங்கியது அந்தி வானத்திலே.

இளஞ் சிவப்பு வர்ணம் விந்தைக் கோலங்களாய் வான்வெளியின்மேல் திசைப்பகுதி பூராவும் கொட்டிக் கிடந்தது. அதில் ஒரு தனி மினுமினுப்பு. பலவித சித்திர அமைப்புகள். எத்தனையோ விசித்திரப் பூச்சுக்கள்.

கண்களுக்கு விருந்து. அந்த இனிய விருந்தை எத்தனை கண்கள் அவ் அந்தி நேரத்தில் வியந்து ரசித்திருக்கும் என்பது வேறு விஷயம்.

கால் மணி நேரத்துக்கும் அதிகமாகவே இயற்கை படைத்துக் கடை பரப்பியிருந்தது அந்த வர்ண ஒளிக் காவியத்தை; இன்சுவை ஓவியத்தை!

என் கற்பனை விளையாடிக்களித்தது—

இனிய ரோஸ் நிறம் பூசிக் கிடக்கும் அந்த ஒளி மைதானத்தில் அழகுக் குழந்தைகள் ஓடிஆடி விளையாடும் காட்சிகளை ஆக்கியது அது.

கண்ணுக்குக் குளுமையான வர்ணம் பரப்பிய அந்த உயர் அரங்கத்திலே காட்சிக்கு இனிய சுந்தரிகள், மனோரம்மியமான உடைகள் அணிந்து, விதம் விதமான நாட்டியங்கள் ஆடுவதை சித்திரித்தது அது.

ரோஜா நிறம் இனிய பூச்சுகளாகவும், அழகிய நிழல்களாகவும், எழில் நிறைந்த ஒளி ஓட்டங்களாகவும் பரவிக்கிடக்கும் பரப்பில், மத்தாப்பூ வண்ணங்களில் நீர்க்கொடிகளை அள்ளிச் சிவிறும் நீரூற்றுகள் பலப்பல தோன்றிச் சிரிப்பதை அது தீட்டியது.

மனோகரமான, கண்ணுக்கு இனிய, வர்ணம் விரிந்து கிடக்கும் நீண்ட பெரும் வெளியில் நான் உல்லாசமாக நடந்து பொழுது போக்குவதாய் என் மனம் எண்ணியது.

மலைப்பரப்பு இவ் இனிய ரோஜா நிறப் போர்வை போர்த்துக் கிடப்பதாய் கற்பனை ஒரு காட்சி அமைத்தது.

எப்போதும் அந்திமயமான சூழல் நிலவும் ஒரு அற்புத உலகம். அங்கே ரோஜாநிற மனிதர்கள் — ஆண்கள், பெண்கள், குழந்தைகள் — ஒய்யாரமாகத் திரிகிறார்கள். விந்தை வர்ணங்களில் விசித்திரப் பறவைகளும் மிருகங்களும் சஞ்சரிக்கின்றன.

மேல்திசை வானம் ரோஜா நீர் பரவிக் கிடக்கும் கடல். அதில் ஒளிமீன்கள் துள்ளுகின்றன.

இளம் சிவப்பு நிற வெள்ளம் புரண்டு ஓடுகிற ஆற்றின் மேல்பரப்பு அது என்றும் கற்பனை பேசுகிறது.

இரவு முன்னேறிக்கொண்டிருக்கிறது. இருட்டின் வலிமை ஓங்கி வருகிறது. வானத்து ரோஜாவீதி மாறுதல் பெறுகிறது.

அதன் தொலைதூரத்தில் ஒரு புள்ளி. சிறிதாக இருந்து, முன்னேறி முன்னேறிப் பெரிதாக வளர்ந்துகொண்டே வருகிறது. ஒளி பிரகாசமேற்று ஓங்குகிறது. வரவர, ஒளிமயமான குதிரைமீது, கண் கூசவைக்கும் பிரகாசமான உருவம் ஒன்று கம்பீரமாக அமர்ந்தவாறு வந்து கொண்டே இருக்கிறது. குதிரையின் கால்கள் எழுப்புகிற இளம் சிவப்பு நிறத் தூசி நெடுகிலும் பரவி மங்குகிறது. — இப்படியும் கற்பனை ஓவியம் தீட்டிக் களித்தது.

# " பரமான்ன "

— பி. எஸ். வி. சுப்ரமண்யன்

பண்டித ரத்னம் - தர்மாதிகாரி - வித்வான் ஸ்ரீ ராமசந்திர ஸோமயாஜியின் வீட்டில் நான் குடியிருந்தேன். அவர் மைசூர் ஸம்ஸ்கிருத காலேஜில் அத்வைத வேதாந்த புரொஃபஸர். அவர் பிராம்மணர். பழங்கால சம்பிரதாயப்படி குடுமி, காதில் கடுக்கன், பஞ்சகச்சம், உத்திரியம், ப்ராதக்கா லஸ்நானம், பூஜை-புனஸ்காரம் இவைகளை அனுஷ்டித்து வந்தார் காலேஜ் சுமார் ஒன்றரை மைல் தொலைவிலிருந்தது. கொளுத்தும் வெயிலானாலும், கொட்டும் மழையானாலும் குடையைப் பிடித்துக்கொண்டு நடந்துதான் போவாரே ஒழிய பஸ்ஸில் போக மாட்டார். "இதோ தானே இருக்கிறது. சோம்பேறிகள் தான் பஸ்ஸில் போக வேண்டுமென்றிருப்பார்கள். மேலும் பஸ்ஸிற்காகக் காத்து, கால் கடுக்க நின்று தவங்கிடக்கும் நேரம் - நடந்து சென்ருல் காலம், காசு ஏதும் வியர்த்தமாகாது; காலும் நோவாது; இரத்த ஓட்டம் நன்ருகும்," என்பார்.

ஒருநாள் காலை என் ரூமை விட்டு வெளியே வந்ததும் வாசலில் பச்சைத் தென்னை மட்டைகள் கிடந்ததைக் கண்டு துணுக்குற்று நின்றேன். அவ்வமயம் அவர் வந்து, கன்னட மொழில், "என்ன, திகைத்து நிற்கிறீர்கள்? என் மகன் பெரியவனுக்குக் கல்யாணம். இரண்டு நாட்களில் நாங்கள் புறப்பட்டு விடுவோம். இந்தாருங்கள், பத்திரிகை," என்று என் கையில் ஒரு கவரைக் கொடுத்தார். "நீங்கள் எங்காவது "டூர்" போவீர்களா? இல்லையானுல் வீட்டைக் கொஞ்சம் கவனித்துக் கொள்ளுங்கள். கல்யாண தினத்தன்று இரவே நாங்கள் உடுபியிலிருந்து கிளம்பி மறுநாள் விடியற்காலையில் இங்கே திரும்பி விடுவோம். இரண்டே நாள் தான்," என்று இரண்டு விரலைக் காட்டிச் சிரித்தார். அவர் வாயெல்லாம் பல் - பொய்ப்பல். மகனுக்குக் கல்யாணம்; மருமகள் வரப் போகிருள் என்ருல் ஆனந்தமிருக்கத்தானே செய்யும்.

எனக்கு ஓரே வியப்பு. ஒன்று: பச்சை மட்டையை வீட்டிற்கு முன் வைப்பதை நாம் நேர் விரோதமான அமங்கலமான காரியத்திற்குத்தான். பச்சை மட்டையைப் பந்தல் போடத்தான் வைத்திருந்தார்கள். இரண்டாவது: பத்திரிகையைக் கொடுத்த அவர் உபசாரத்திற்காவது "நீங்கள் அவசியம் கல்யாணத்திற்கு வர வேண்டும்" என்று அழைக்காமல் வீட்டைப் பார்த்துக் கொள்கிறீர்களா என்றது.

நான் சாமாளித்துக் கொண்டு, "ரொம்ப சந்தோஷம். நான் எங்கும் போவதாக இப்போதைக்குப் புரோகிரும் இல்லை. நீங்கள் கவலைப்படாமல் போய் வாருங்கள்," என்றேன்.

அவர்கள் ஊருக்குக் கிளம்புமுன் அவரது மனைவி என்னைக் கூப்பிட்டனுப்பி, தான் வாங்கியுள்ள ஜவுளி வகையருக்களைக் காண்பித்து என் அபிப்ராயத்தைத் தெரிந்துகொண்டபின், சில புதுப்பூட்டு - சாவிகளையும் காண்பித்து, "வீடு கட்டியதிலிருந்து நாங்கள் வீட்டைப் பூட்டிக் கொண்டு கிளம்பியதே இல்லை நீங்கள் இருப்பது எங்களுக்குத் தைரியமாயிற்று. இரவில் எல்லாக் கதவுகளையும், ஜன்னல்களையும் ஒன்றுக்கு இரண்டு தடவை பார்த்துவிடுங்கள். ட்யூப் லைட்டைப் போட்டு வையுங்கள். ரேடியோவையும் போட்டுக்கொள்ளுங்கள். ஆள் நடமாட்டமிருப்பதாகத் தெரியட்டும்," என்று என் காதுக்குக்கூட சரியாகக் கேட்காதபடி

மெதுவான குரலில் சுற்று-முற்றும் பார்த்துக்கொண்டே சொன்னுள்.

"கவலையின்றி போய் வாருங்கள்," என்று நான் சொல்லி, "கல்யாணத்திற்கு இனிமேல்தான் கூட்டம் சேருமாக்கும்," என்றேன்.

"ஊஹூம். நாங்கள் வீட்டுக்காரர்கள் மட்டும்தான். எங்கள் இன - ஜனமெல்லாம் உடுபியிலேயே இருக்கிருர்கள்," என்ருள் ஸ்ரீமதி ஸோமயாஜி.

கல்யாண தினத்தன்று போய்ச்சேரும்படி ஒரு வாழ்த்துச் செய்தியை அனுப்பினேன்.

ஸோமயாஜிகள் சொன்னபடி கல்யாண தினத்தன்றே இரவில் கிளம்பி மறு நாள் காலையில் வந்து சேர்ந்தனர். மணப்பெண், அவளுடைய சகோதரர் ஒருவர், ஸோமயாஜியின் உடன் பிறந்தவர்களிருவர்-இவர்களே உபரி.

"கல்யாணம் நன்ருய் நடந்ததா?" என்று குசலம் விசாரித்தேன்.

"ஆமாம்" என்ருர் ஸோமயாஜி.

இரண்டு நாட்கள் கழிந்தன.

ஸோமயாஜி என் அறையின் கதவைத் தட்டினுர். நான் திறந்ததும், கொச்சைத் தமிழில், 'இன்னிக்கி சாப்பாடு இங்கே, ஓங்கள்க்கு, என்ன, அவஸ்யம் வாருங்கோ,' என்ருர்.

"அதற்கென்ன, பார்க்கலாம். முடிந்தால் வரேன்."

"அப்டில்லாம் ஸொல்லப்படாது. மத்யாஹ்னம் பந்த்ரண்டு மணிக்கி என் ஸ்நேஹிதாள் எல்லாம் வர்ரா. அப்டி ஸௌகர்யப்பட்லேன்னு ராத்ரி கண்டிதம் சாப்டணும். ஹோடல் வேண்டாம்" என்று உபசரித்தார்.

"இன்னிக்கி என்ன விசேஷம்னு சொல்லலையே நீங்கள்?"

"அதா; வந்து... இன்னிக்கி க்ரஹப்ரவேசம் ஆரத்தி நடக்கும்."

அதையெல்லாம் நான் பார்க்க மாட்டேனென்ருே, அல்லது பார்க்க வேண்டிய அவசியமோ தோன்றவில்லை போலும்!

"ஆபீஸிலே வேலை எப்படியிருக்கோ! எங்க சீஃப் வரார். அதனுலே ஏதாவது 'லேட்'டாச்சுன்னு, நீங்க, பாவம், எனக்காக சிரமப்பட்டுக் காத்திண்டிருக்கவேண்டாம்," என்றேன்.

"ஸ்ரமம் ஒண்ணுமில்லே. எத்னை மணி ஆகட்டும், நீங்க வாருங்கோ அவஸ்யம். மத்யாஹ்னம் வந்தா நல்லது. என் ஸ்நேஹிதாள் எல்லாம் வரா. பிரின்ஸிபால், இஞ்சினீர், அவா - இவா எல்லாம். தொட்ட - தொட்ட மனுஷ்யாள்," என்ருர் ஸோமயாஜி.

'சரி' என்று சொல்லி ஆபீஸிற்குச் சென்றுவிட்டேன்.

மத்தியான்னம் வேலை அவ்வளவு மும்முரமில்லாததால் என் அறைக்குத் திரும்பினேன். வீட்டில் விருந்தாளிகள் நிரம்பியிருந்தனர். விசேஷங்கள் முடிந்து எல்லாரும் சாப்பாட்டிற்காகத் தயாராயிருந்தனர்.

ஸோமாயாஜி என் வருகைக்கு மிகவும் சந்தோஷப்பட்டார். பக்கத்து, பெரிய வீட்டில் சாப்பாட்டு ஏற்பாடுகள் நடந்து இலைகள் போடப்பட்டன. ஸோமயாஜி "வாருங்கோ, பக்கத்லே ஏற்பாடு-எல்லாரும் போகலாம்" என்ருர்.

"சரி" யென்று சொல்லி வேஷ்டியும் சட்டையும் அணிந்து கிளம்பினேன்.

ஸோமயாஜி "சட்டை எதுக்கு வேண்டாம். சும்மனே வாருங்கோ," என்ருர்.

எனக்கு மிகச் சங்கடமாகிவிட்டது. சாப்பாட்டுக்கு சட்டையைக் கழற்றுவானேன்! ஆனுல் வந்திருந்தவர்கள்

அநேகமாக வெற்றுடம்புடன் தானிருந் தார்கள். நான் திகைத்துப்போய், 'போவதா-வேண்டாமா'' என்று எண் ணிக்கொண்டு நின்றேன்.

'' ஸரி. பரவால்லெ. அங்கவஸ்திரம் போட்கோங்கோ,'' என்று சொல்லி நகர்ந் தார்.

வேண்டா, வெறுப்பாக ஒரு சின்ன அங்கவஸ்த்திரம் - யதேச்சையாக என் வசமிருந்ததைப் போட்டுக் கொண்டு, அறையைப்பூட்டி விட்டுக் கிளம்பினேன்.

பலர் பந்தியில் அமர்ந்திருந்தனர். பாய் விரிக்கப்பட்ட இடத்தில், என்னைப் போலச் சட்டையணிந்து வந்திருந்த ஒருவர் அருகே போய் அமர்ந்தேன். சற் றைக்கெல்லாம் ஸோமாஜி ''இங்கே - இங்கே வாருங்கோ. அங்கே பொம்னுட்டி ஒக்கார்வா'' என்ருர்.

''இது ஏதடா சங்கடம். சாப்பாடு போடறதுக்குள்ளே நம்மைக் 'கஸரத்' வாங்கிடுவார் போலிருக்கே,'' என்று எண்ணி அவர் சொன்ன இடத்திற்கு மாறி னேன்.

இலையில் பரிமாற ஆரம்பித்தனர். பரிஜாரகர்களுக்குப் பதில் பந்துக்களும், ஸ்நேகிதர்களுமே பரிமாறினர். ஆனல் கரண்டியின்றி கையாலேயே கறி, கூட்டு, சட்னி இவற்றைப் படைத்தனர். எனக்கு அது கொஞ்சமும் பிடிக்கவில்லை. சாதம் வைத்து, நெய் ஊற்றிய பின், பஞ்சாதி சொல்லி, துளசி ஜலத்தை எல்லோருக்கும் ஆபோஜனம் செய்து '' அரிஹி '' என்று சொன்ன உடனே நெசவுச் சாலையில் சுவிட்ச் போட்ட உடனேயே வரிசை - வரிசையாக உள்ள இயந்திரங்கள் ஏக காலத்தில் இயங்கத் தொடங்குவதே போல, பந்தியில் அமர்ந்திருந்த அனைவரும் உள்ளங் கையிலிருந்த தீர்த்தத்தை உறிஞ்சி, ஆறுதரம் அன்னப்பிராச்சேனம் செய்து, சாப்பாட்டைத் தொடங்கினர்கள்.

சாதம், பருப்பு வைத்தால் சாம்பார் வரும் என்று காத்துக் கொண்டிருந்தேன்; ''சாரு ஹாக்கப்பா,'' என்ருர் ஸோமாஜி. அதாவது ரஸம்.

இவர்கள் சம்பிரதாயத்தில் சாம்பார் இல்லை போலும் என்றெண்ணி நானும் ''ஸாரு'' ஊற்றிக்கொண்டு சாப்பிட்டேன். இரண்டாந் தடவை சாதமும், ஸாரும் கேட்கப்பட்டது. எனவே இதுவே முக்கிய அம்சமாயிருக்கும். அடுத்தது ''மோர்'' தான் என்று எண்ணினேன். ஆனல் அதற்குப்பின் ''சித்ரான்ன'' பரிமாறப்பட் டது. ''சித்ரான்ன'' என்பது தேங்காய் சாதம், புளியஞ்சாதம் போன்ற கலவைச் சாதங்கள். இங்கே 'வாங்கிபாத்' தான் ''சித்ரான்ன''வாகப் பரிமளித்தது. கறிவகைகள், அப்பளம், வடகம் எல்லாம் காலியாக்கி விட்டேன். அதற்குப் பின் ''ஹுளி'' அதாவது குழம்பு. ''ஸெளத்தே காயி ஹுளி'' வெள்ளரிக்காய்க் குழம்பு வந்தது. எனக்கு ஒரே வேடிக்கையாயிருந் தது. எல்லாம் தலை கீழாயிருக்கிறதே என்று! சரி, அதுவும் சாப்பிட்டாயிற்று. பின்னர் வெண்டைக்காய்க் குழம்பு, மோர்க் குழம்பு எல்லாம் வர ஆரம்பித்தன. எனக்கு ஒரே குழப்பம். எது ஆரம்பம், எது கிரமம் என்பதே புரியவில்லை. மற்ற வர்களைப் பார்த்துப் பார்த்து நானும் அதையே பிரதிபலித்தேன். அப்புறம் மைசூர்பாகும், ஜாங்கிரியும் போட்டனர். அடுத்து ஒரு கூட்டு.

ஸோமயாஜி என் பக்கம் வந்து உட் கார்ந்து கொண்டு எனக்கு எதிரே அமர்ந் திருந்தவர் ரயில்வேயிலிருந்து ரிட்டைய ரான சீஃப் என்று என்னையும் அவருக்கு அறிமுகம் செய்வித்தார். பின்னர் என் இலையைப் பார்த்துவிட்டு, ''என்ன, ஒண் ணும் போட்க்கலேயே,'' என்ருர்.

''எல்லாம் போட்டு, நான் காலி பண்ணியாச்சு'', என்றேன்.

''என்ன அப்டி, மதுரமாயில்லியா மைஸூர்பாக்?'' என்ருர்.

''ஓ பேஷாயிருககு, எனக்குப் போரும்'', என்றேன்.

''போருது'', என்று சொல்லி இன்னுமிரண்டு மைசூர்ப்பாக்கும், ஜாங்கிரியும் போடச் செய்தார். எனக்குத் தெகட்டியது.

''என்னல் முடியாது'' என்றேன்.

''முடியாதா? நான் பார்க்கறேன்,'' என்று சொல்லி நன்ருக அமர்ந்தே விட்டார்.

எனக்கோ, கொஞ்சம் உரைப்பாகச் சட்னியோ அல்லது ஊறுகாயோ இருந்தால் தேவலே யென்று தோன்றியது. கேட்டால் கரண்டியால் போடமாட்டானே! கையால்தானே போடுவான் பாவி,' என்று சும்மாயிருந்து விட்டேன். ஒருவாருக இனிப்புப் பண்டங்களைக் காலி செய்தேன்.

பின்னர் பாயசம் வந்தது.

இனிப்புத் தின்று தெகட்டிப்போயிருந்ததால் அந்தப் பாத்திரம் அங்கே வரும் போது என் இரு கைகளையும் இலையில் குறுக்கே பொருத்தி, ''வேண்டாம், தயவு செய்து வேண்டாம்,'' என்று மறுத்து விட்டேன்.

சற்றைக்கெல்லாம் விருந்தினரை விசாரித்துக் கொண்டே வந்த ஸோமாஜி என்னிடம், ''பரமான்ன எப்படிருக்கு?'' என்ருர். ''அன்ன'' என்ருல் கன்னட மொழியில் ''சாதம்''. நான் ''சித்ரான்ன'' என்பது போல் ''பரமான்ன''வும் ஒரு வித சாதம் என்று நினைத்து, ''யாரும் அதை எனக்குப் பரிமாறவில்லையே. அதுதான் கடைசி அயிட்டமா?'' என்றேன்.

''இல்லே. மஜ்ஜிகே அன்ன (மோர் சாதம்) தான் கடைசி,'' என்று சொல்லி 'யாரப்பா அங்கே, இவருக்குப் 'பரமான்ன' போடலியே கொண்டுவா,'' என்ருர்.

ஒருவர் கையில் பாத்திரத்துடன் ''நீங்கள்தான் வேண்டாமென்று மறுத்தீர்களே'' என்று சொல்லிக்கொண்டே வந்தார்.

''நான் பாயஸம் தான் வேண்டாமென்றேன். பரமான்ன வேண்டாமென்று சொல்லவில்லையே,'' என்றேன்.

அவர், பாத்திரத்தைத் தாழ்த்தியதும் பார்த்தேன். அதில் பாயஸம்.

நான், ''வேண்டாம். இதைக் கொண்டுபோய் வைத்துவிட்டு பரமான்ன கொண்டுவாருங்கள்'' என்றேன்.

அவர் விழித்தார்.

ஸோமயாஜி அங்கிருந்தபடியே, ''போடப்பா அவருக்குப் பரமான்ன,'' என்ருர்.

நானும் ''பரமான்ன மட்டும் கொஞ்சம் கொண்டுவா. பாயஸம் வேண்டாம்'' என்று மன்ருடினேன்.

ஸோமயாஜியே வந்துவிட்டார். ''என்ன, கேட்டீங்க, ஏன் வேண்டாம்?'' என்ருர்.

''நான் கேட்டது 'பரமான்ன.' இவர் கொண்டுவந்திருப்பது பாயஸம். நான் இதையா கேட்டேன்,'' என்றதும் அவர் இடி இடியென்று சிரித்தார். வேறு சிலரும் சிரித்தார்கள். ''இதுதான் பரமான்ன'' என்ருர் ஸோமயாஜி.

நான் அசந்தே போனேன். ''உங்கள் பாஷையில் 'அன்ன' என்ருல் சாதம் என்றுதானே அர்த்தம்? ''பரமான்ன'' என்பது ''சித்ரான்ன''வைப்போல் ஒரு வித சாதம் என்றுதான் நினைத்தேன்,'' என்றேன்.

''ஆமாம், ஆமாம்; எல்லா ''அன்ன'' வையும் விட ஸ்லாக்யம். அதனுலேதான் ''பரமான்ன'' என்கிருேம். நீங்க கொஞ்சம் சாப்புட்டுப் பாருங்கோ. பரமானந்தமா இருக்கா–இல்லையான்னு,'' என்று சொல்லிச் சிரித்தார்.

"போதும், போதும். எனக்குச் சாதாரண "அன்ன"வும் கொஞ்சம் மோரும் மட்டும் கொடுங்கள். பரமானந்தமடைவேன்," என்றேன்.

என் "பரமான்ன" நிகழ்ச்சி அங்கு வந்திருந்த விருந்தினர் யாவருக்கும் ஒரு வேடிக்கை நிறைந்த மகிழ்ச்சியாயமைந்தது. ●

# காலமும் மனிதரும்

— வல்லிக்கண்ணன் —

'வருங்காலம் நம்முடையது!'

பலர் இப்படிச் சொன்னார்கள்.

சொல்லாமலே எண்ணிக் கொண்டிருந்தவர்கள் மிகப் பலர்.

'இறந்த காலம் இனியது!'

இவ்விதம் கூறினவர் எண்ணற்றோர்.

கடந்துபோன நிகழ்ச்சிகளின் நினைவுகளை அசைபோட்டு, அந்த இனிமையிலேயே சொக்கி இருந்தவர்கள் கணக்கிலர்.

வருங்கால நம்பிக்கையர் பசுமையான கனவுகளிலும், இறந்தகால நினைப்பினர் சென்றுவிட்ட நினைப்புகளிலும் அமிழ்ந்து செயலூக்கம் அற்றிருந்தபோது,

கால நினைப்பற்றோர்,

கருமமே கண்ணாக உழைத்தார்கள். காசு பணம் சேர்த்தார்கள்.

'நிகழ் காலமே நித்தியமானது'

என்று அவர்களுக்கு யாரும் சொல்லவில்லை.

ஆனாலும், அவர்கள் பணம் பண்ணுவதே குறியாக ஓடியாடி உழைத்து அலுத்தார்கள்.

முடிவில் —

பசுமையான வருங்காலத்தைக் காண முடியாதவர்களும்,

சென்றதை எண்ணிப் பேசிச் செயலற்றுப் போனவர்களும்,

ஓடும் கடியார முள்ளோடு போட்டியிட்டுத் தீவிரமாக உழைத்தவர்களும்,

செத்துத்தான் போனார்கள்.

காலம் என்றும் வறண்ட நிகழ்காலமாகவே நகர்கிறது.

மனிதர் அவரவர் இயல்புகளுக்கேற்ப அதற்கு வர்ணம்பூசி, தங்களைத் தாங்களே ஏமாற்றிக்கொள்கிறார்கள்.

---

ரத்தம் சிந்தி சிந்தி உலகுக்கு அலுத்துப் போய்விட்டது என்று நான் நினைக்கிறேன். ஏங்கித் தவிக்கும் உலகுக்கு வழிகாட்டும் பேறு பழமைச் சிறப்பு வாய்ந்த இந்தியாவுக்கு ஒரு வேளை கிடைக்கக்கூடும் என்று நான் என்னையே பாராட்டிக்கொள்கிறேன்.

— காந்தியடிகள்

# டோவர் கடற்கரை

**Translation of Matthew Arnold'S Poem "Dover Beach" by Tiruloka Sitaram"**

அமைதி உற்றது ஆழ்கடல் இன்றிரா
அலைகள் சீராய் அமைந்து நடக்கும்
கடலிடை கழியில் காணும் நிலவெழில்
பிரெஞ்சுக் கரையில் பிறங்கும் விளக்கு
ஒளியை வீசி உடனே ஏகும்
இங்கிலாந்தின் இக்குணிக் குன்றுகள்
நின்ற குடாவில் நீண்டு குலுங்கும்
சாளரத் தருகே சற்றுநீ வாராய்!
இரவின் சூழல் எங்கும் இனிமை
நிலவொளி படர்ந்த நீள்மணற் பரப்பைத்
தரங்கம் வந்து தழுவும் இடத்தில்
நிமிர்ந்தெழு கின்ற நெடிய தூற்றலைக்
காணாய்! அலைகள் கவர்ந்தே இழுத்துக்
குவிக்கும் சிறிய கூழாங் கற்களின்
அரற்றுதல் கேளாய்! தொடங்கி நிறுத்தி
மேலும் பின்னர் மெல்லத் தொடங்கும்
அலையின் ஓலம் அனுஸ்வரமாக
முடியாத் துயரை முறைவைக் கின்றது.
என்றோ பண்டு ஏஜியன் கரையில்
சோபகின்ஸ் இந்த சோகக் குரலைக்
கேட்டே இருந்தான்; கேடுறும் மானிட
வாழ்வின் அலைகள் வருவதும் போவதும்
இதயத் துள்ளே ஏந்தினான். நாமும்
இப்பால் தொலைவில் இருக்கும் வடகடல்
கரையில் இங்கும் கரையும் ஒலியில்
எண்ணம் ஒன்று இழைந்திடக் கண்டோம்.
மண்ணின் கரையை மற்றும் தழுவி
நம்பிக்கை யென்னும் நற்கடல் வளைத்து
நின்றதோர் காலம் நீண்டு கிடந்தது,
ஒளியில் வளைத்த ஒட்டியா ணம்போல்.
ஆனால் இன்றவ் வலைகடல் வற்றி
உள்ளுக் கேகும் ஓலம் ஒன்றையே
இங்கு நான் கேட்கிறேன் ஏங்கி யடங்கும்
இரவின் மூச்சு இத்தரை யெங்கும்
அழகிய கரைகள் அம்மண மாகிக்
கிடக்கும் கோலம் கிளறும் சோகம்.
அன்பே நாமிங்கு அரவணைத் திருப்போம்.
கனவாய் உலகம் காணக் கிடக்குது,
அத்துணை மாற்றம் அத்துணை அழகு
அத்துணை புதுமை ஆயினும் இதனில்
களிப்போ காதலோ காணும் ஒளியோ
காணும் உறுதியோ கவினார் அமைதியோ
துன்பில் துணையோ தோன்றுவ தில்லை.
திக்குமுக் காடித் திரும்பி யோடும்
அபயக் குரல்கள் ஆர்த்திடும் மூடச்
சைனியம் இருளில் சமர்புரி கின்ற
இருட்டு வெளியில் இருவராய் இங்கே
இருப்பது உண்மை இருப்போம் வாராய்!

சிவாஜி மாத இதழின்

புதிய சொந்த அச்சகம்

# கவிஞர் அச்சகம்

2-A, கோட்டை ஸ்டேஷன் ரோடு, திருச்சி-2.

எல்லாவித அச்சு வேலைகளும்

அழகாகச் செய்துதரப்படும்

உரிமையாளர் : திருலோக சீதாராம்



# அமுத வாக்கு

பாவ நெஞ்சினோர் நிதம்

பறித்தல் செய்வ ராயினும்

ஓவி லாத செல்வ மின்னும்

ஓங்கு மன்னே வாழ்கவே !



Edited and Published by its owner Sri Triloka Sitaram & Printed by him at Kavignar Press 2-A, Fort Station Road Trichy-2. Annual Subscription Rs. 10